

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அன்பு வழி காட்டும் அருளுபதேசங்கள்



தொகுத்தோர் :

பாலகவி. மீ. கே. வேங்கடராமன்

வித்துவான். சு. மங்கையர்க்கரசி



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்

அறுபதாவது குருபூஜை

மணி விழா நன்னாளில்


வெளியிடுவோர்:

சற்குருதாசன் டிரஸ்ட்

11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி,

பெரியகாஞ்சிபுரம்-631502

10—1—1983

விலை: ரூ. 8-00

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *



## பிரார்த்தனை

1. உம்மை மறக்கச் செய்யும் எந்த ஒரு பொருளும் என்னை அணுகா தொழிக.

2. உமது திருவருளை நினைவூட்டும் ஓர் அற்பப் பொருளையும் யான் போற்றி மகிழ்வேனாக.

3. காமமாதி கொடும் பேய்களெல்லாம் என் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளாவண்ணம் நீர் காத்தருள்வீராக.

4. கருணையாம் உமது அருள் வெள்ளத்தில் யான் அமிழ்ந்து மூழ்குவேனாக.

5. செய்யும் செயல்களுக்கு யான் அதிகாரி இல்லையென்று உணர்த்துவீராக.

6. நன்மையும் தீமையும் நாயகன் அருள் என்று நாடுவேனாக.

7, புன்மைதரு புவனப் பொருள்களையெல்லாம் விரும்பாது ஒழிவேனாக.

8. எத்தகையோராயினும் உமது அடியாரை நீர் என எண்ணிப் போற்றுவேனாக.

9. என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் உமக்கே அர்ப்பணம் செய்தேன்.

10. என்றெனைக் காப்பீர் ! காப்பீர் !! காப்பீர் !!!

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அன்பு வழி காட்டும் அருளுபதேசங்கள்




தொகுத்தோர் :

பாலகவி. மீ. கே. வேங்கடராமன்

வித்துவான். சு. மங்கையர்க்கரசி


*

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

60வது குருபூஜை மணி விழாவில்


வெளியிடுவோர் :

சற்குருதாசன் டிரஸ்ட்

11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி,

பெரிய காஞ்சிபுரம்-631 502.





10—1—1983 விலை ரூ. 8-00



# முன்னுரை

'செந்தமிழ் விளக்க வள்ளலார்' 'ஆட்சிச் சொற்காவலர்' 'நற்றமிழ் வித்தகர்'
'சாந்தசீலர்' 'அருட்சுடர்'
உயர்தவத்திரு. **கீ. இராமலிங்கனுர்,** எம். ஏ., அவர்கள்

அன்புநெறியிலே மக்கள் அனைவரும் வாழவேண்டும். இதுவே, அருள்மிகு இரெட்டியப்பட்டி சுவாமிகளின் குறிக்கோள். இதற்காகப் பொதிகையிலே பன்னிரண்டு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து, இறைவன் அருளால் பல உண்மைகள் விளங்கப்பெற்றார்கள். அதன் விளைவாக வெளிவந்ததே அடிகளாரின் அருட்சட்டத் திருநெறியாகும்.

அதன்படி முறை பிறழாமல் ஒழுகிக்கொண்டுவரும் அடியவர்களின் உள்ளத்தைப் பக்குவப்படுத்துவதற்கான அருளுரைகளை. இனிய ஓசை பொருந்தியனவாயும், பொருள் பொதிந்த இலக்கியநயம் மலிந்தனவாயுமுள்ள பல அரிய பாடல்களைப் பாடி வைத்துள்ளார்கள் சுவாமிகள். அப்பாடல்களைப் பலரும் படிக்க வேண்டும் அவற்றுள் அருளப்பெற்றுள்ள அறிவுரைகளை உணர்ந்து ஓதிப் பயனடைய வேண்டும்.

அங்ஙனம் பயனடைவதற்கு வகை செய்யும் அருள் நூலே "அன்புவழி காட்டும் அருளுபதேசங்கள்" என்னும் இந்நூல். பொன்னான பாடல்களில் பொறிக்கப் பெற்ற மணி போன்ற கருத்துக்களை விளம்பும் வரிகள் அறுபதினைத் தேர்ந்தெடுத்து, அறுபதாம் ஆண்டு குருபூசையான மணி விழாவிலே வழங்கியிருக்கிறார்கள் இவற்றைத் தொகுத்த அருட்சட்டநெறி நிற்கும் தவச்சீலர்கள். இருபத்தெட்டு தலைப்புகளில் இவ்வறுபது மாணிக்கங்களும் தொகுக்கப் பெற்றுள்ளன. ஒவ்வொரு மாணிக்கத்தின் கீழும் தரப் பெற்றுள்ள விளக்கங்கள் பெரிதும் பயன்தரத் தக்கன. தெள்ளத் தெளிந்த தமிழில், ஓத இனிக்கும் நயங்கள் நிரம்பிய நடையில் அவை எழுதப்பெற்றுள்ளன.

தொகுப்பாசிரியர்களாகிய தவத்திரு. பாலகவியவர்களும், தவத்திரு-வித்வான் அரசியார் அவர்களும், பாடல்களைத் துருவித்துருவிப் பயின்று, மணியான வரிகளைப் பெயர்த்தெடுத்திருப்பதுடன், அவ்வரிகளுக்கு ஒளிமிளிரும் விளக்கங்களையும் கொடுத்திருப்பதற்காக, அவர்களை அடியவர் உலகம் பெரிதும் போற்றக் கடமைப் பட்டிருக்கிறது. மிகவும் முயன்று குறுகிய காலத்திற்குள், நறுமணம் கமழும் இந்நூல் மலரை, அறுபதாம் குருபூசை நாளன்று எந்தை குருபாஞரின் திருவடிகளில் சூட்டுகின்றனர். நீடு நிலவுக இத்திருவுடையாரின் தொண்டு!

'தமிழ்மணம்'
சென்னை-30.

கீ. இராமலிங்கம்
28—12—82.

---

# உள்ளுறை



கருணைமிகு வள்ளலாகிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்



மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர்



## பரிபூர்ண விநாயகர்

# பஞ்ச ரத்தின மாலை

சீர்கொண்ட செங்கமல பாதங்க ளிற்பொனின்
செஞ்சிறு சதங்கை முரல
திகழனந் தங்கோடி அண்டத்தி னும்பெற்றி
செப்புகழ லொலிவி ளங்க
ஏர்கொண்ட பாசம்அங் குசம்வீறு மிகுகொப்பும்
இனியமோ தகமும் கொளும்
ஈரிருக ரங்களுடன் அமுதகல சம்கொளும்
எழிற்றுதிக் கையும்இ லங்க
பார்கொண்ட பக்தரொடு யோகியர்கள் ஞானியர்கள்
பரவமரர் குழுது லங்க
பருவரல் தவிர்த்தருட் சட்டநெறி நல்குகுரு
பரரொடடி யார்கள் பொலிய
பேர்கொண்ட கூடல்நக ரத்திலறு பான்நான்கு
பெரியவிளை யாடல் புரியும்
பிரான்சோம சுந்தரன் புத்ரரத் தினமாய்ப்
பிறங்குகண பதிவ ருகவே. 1

அருவமென உருவமென அருவுருவ மெனஎங்கும்
அமைதூய அருளா ளனே
ஆதார மோராறில் ஐம்பத்தொ ரட்சரமு
மாகியொளிர் திருவா ளனே
தருவுடைய அமராவ திக்கிறைவன் வைத்தநந்
தனவனம் தழைவ தற்கும்
தண்பயிர் வளர்ந்தென்றும் எல்லா வுயிர்க்கும்வளம்
தருதற்கும் ஒருகா கமாய்ப்

பெருகுகா விரிதந்த பெருமநின் பேரருள்
பிறங்குபொதி காச லத்தில்
பெற்றிமிகும் இருடிநகர் குருநாத ருக்கருள்
பெருக்குமுயர் கருணு ளனே

மருவுமறு பத்துநாற் சக்திபீ டங்களிலும்
மாஞான சக்தி யாகி
மன்னங்க யற்கண்ணி மகிழ்புத்ர ரத்னமாம்
மதுரைநா யகவ ருகவே. 2

வேதமெல் லாம்பரவ ஆகமமெலாம் பரவ
வியனருட் கலைகள் பரவ
விண்ணவர் குழாம்பரவ மண்ணிலடி யார்பரவ
வேதாந்த சித்தாந் தமாம்

போதம் அருள் குருமாரெ லாம்பரவ அவனிமிசை
பொலியருட் சட்டம் நல்கும்
புனிதமிகு ரெட்டியப் பட்டிசா மிக்கினருள்
புரிஞான வுருவாளனே

பேதமெல் லாம்விலக அருள்ஞான வொளிநனி
பிறங்கிடக் கருணை புரியும்
பெரியனே பேரன்பர் குழுவெலாம் உயர்முத்தி
பெற அருளும் ஓங்காரனே

நாதவுரு வாளனே நல்லெழில் மிகும்வள்ளி
நாயகியை மணம் முடித்த
நல்லண்ண னெனமுருகன் மகிழ்ரத்னமே கருணை
நல்கவிரை வினில்வருகவே. 3

அறமெலாம் வளர உயர் பொருளெலாம் வளரமெய்
யன்பொடின் பெங்கும் வளர
அறிவிஞெளி வளரநல் லான்மஞா னம்வளர
அடியவர் குழாங்கள் வளர

புறமெலாம் விலக உயர் அகமெலாம் வளர அருள்
பொங்குசங் கங்கள் வளர
புகழ் வளர நலம்வளர பொறைபுனிதம் மெய்ப்பரம
போதம்நனி யோங்கி வளர

திறமெலாம் வளரநல் தெளிவுமிக வளரஉயர்
தெய்விகப் பொலிவு வளர
திருவருட் சட்டநெறி தந்துபே ணிருடிநகர்
தேசிகன் திருவு ளத்தில்
பெறலரிய பரிபூர்ண ரத்னமாய் என்றும்
பிறங்குமெய்ஞ் ஞான மணியே
பேசரிய நினைவரிய கணநாதனே எமைப்
பேணவிரை வினில்வரு கவே. 4

ஆதிநா யகனென்ன அமரர்கள் குழாம்தினமும்
அன்பொடலர் சூட்டி மகிழ்வார்
அற்புதத் தற்பர கணேசமா மணியென்ன
அருள்நாடி அடியர் தொழுவார்
ஜோதியாய் மதுரைநகர் வைகைதென் கரையினில்
தூயகுரு நாதர் எதிரில்
தோன்றியொரு சிலையாகி அரசுவேம் படியில்
துலங்கு பரிபூர்ண மணியே
நீதிநெறி யெல்லாம் திரண்டவொர் அருட் சட்ட
நெறிநல்கு நிமல வுருவே
நேமநிட் டைப்பய னெலாம்நல்கி முத்தியருள்
நிகமாந்த சித்தாந் தனே
ஓதியுண ரற்கறிய சூக்மமே அடியவர்கள்
உளமேவும் ஒருரத் னமே
உயர்பரம பதநாத உருவருவில் ஒளிர்போத
உரிமையுடன் இவண் வருகவே. 5

"அவனன்றி ஓரணுவும் அசையாது"
இதன் பொருள் என்ன ?

இறைவன் எல்லாப் பொருள்களையும் அசைவிக்கின்றான். தான் அசைவதில்லை, அவ்வாறு அசைக்கப்படுகின்ற ஒவ்வொரு பொருளும் அசைவதனால், நகர்வதனால், செயற்படுவதனால் உண்டாகும் வினைகள் அவ்வப் பொருள்களையே சாரும். அசைவிக்கின்ற செயல் ஒன்றுதான் இறைவனுடையதே யன்றி, அதனால் உண்டாகும் வினைகளை ஏற்றுக்கொள்ளும் செயல் இறைவனுடைய தன்று.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# குருநாதர் வரலாறு

பூவுலகில் பிறந்து இருந்து வருகிறோம். ஏன் பிறந்தோம்? எவ்வளவு நாள் இருப்போம்? பிறகு என்ன ஆவோம்? என்பது புரியவில்லை. இந்தக் கேள்விகள் எவ்வளவோ காலத்திற்கு முன்பே எழுந்தன. நுண்ணிய அறிவுடைய பலர் நுணுகி ஆராய்ந்தும், அரும் பெருந் தவத்தாற் பெற்ற அருளாற்றலால் உணர்ந்தும் விடை கண்டுள்ளனர். உலக மக்களுக்கு உணர்த்தி யுள்ளனர்.

உயிர்களைப் புனிதமாக்கிப் பேரின்பமூட்டி உய்விக்க வேண்டும் எனும் மாபெரும் கருணையினால் எல்லாம் வல்ல இறைவன் உலகைப் படைத்து, உயிர்களுக்கு உடம்பு கொடுத்து அனுப்பியுள்ளான். செய்நன்றியை உணர்ந்து போற்ற அறியாத மக்கள் வினைக்காளாகி, பிறப்பு இருப்பு இறப்பு எனும் சுழலுக்குள் சிக்கித் தவிக்கின்றனர்.

உலகில் வாழ்வாற்ற உடம்பு தேவைப்படுகிறது, நிலம் நீர் தீ காற்று ஆகாயம் சூரியன் சந்திரன் முதலிய இயற்கைப் பொருள்கள் இன்றேல் நாம் வாழ இயலாது, இவையனைத்தையும் படைத்து இயக்கிப் பேணும் இறைவனின் கருணையைப் போற்றி உய்யவேண்டியது உயிர்களின் கடமை. இதனை வாழையடி வாழையாக வந்த அருட்பெரியார்கள் பலரும் விளக்கியுள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தை அனைத்துயிரும் பெறவேண்டும் என எண்ணியுள்ளனர்; இயம்பியுள்ளனர்.

அச்சீரிய கருத்தைச் செயல்முறையில் நடத்த அவதரித்தவரே ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆவர்.

## திரு அவதாரம்

இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் விளாத்திக்குளம் வட்டம் நாகலாபுரத்தை அடுத்த இரெட்டியப்பட்டி எனும் திருத்தலத்தில் வேளாளர் மரபில் வீரபத்திரப் பிள்ளை ஆவுடையம்மை எனும் பெற்ருேர் செய்த பெருந்தவப் பயனுய் (1856) நள ஆண்டு புரட்டாசி இரேவதியில் சுப்பிர மணியம் எனும் அருட்சேயாக அவதரித்தனர். இளமை யிலேயே தெய்வீகம் மிகுந்தவராகத் திகழ்ந்தனர் பள்ளியிற் படித்த கல்வி சிறிதேயாயினும் அருளுணர்வு படைத்தவரா கவும், அருட்சித்தி மிகுந்தவராகவும் விளங்கினர்.

அருளாளராகியஇவர் விவசாயத்தில் ஈடுபட்டதும் நிலம் பன்மடங்கு பயன் அளித்தது அக்காலத்தில் நாள் முழுதும் உழைத்தும் அரை வயிற்றுக்கும் உணவின்றி வாழும் ஏழை மக்களைக்கண்ட இவர் இரக்கமுற்றவராகி, தூத்துகுடிக்கு வண்டி கட்டிச் சென்று உணவுப் பொருள்களை வாங்கி வந்து கொள்விலைக்கே விற்று உதவி புரிந்தனர். இது கண்ட பெற்ருரும் உற்ருரும் பயனற்ற பிள்ளை என்றனர்.

உடனே அண்ணல் ஊரைவிட்டுப் புறப்பட்டு செந்தூர் சென்று. மதுரை சேர்ந்து வைகை நீராடி, அங்கயற்கண்-ணம்மையையும் ஆலவாயண்ணலையும் வணங்கி வழிபட்டுத் திருவருள் பெற்றனர். அறநெறி பிறழாது வாணிபம் நடத்தும் இஸ்லாமியர் கடையொன்றில்கணக்குப்பிள்ளையாக அமர்ந்து தொழிலாற்றினர்.

## அருள்நெறி நாட்டம்

உலக மக்களிற் பெரும்பாலோர் கல்வியறி வின்றி ஏழைகளாகவும், நோயுடையவர்களாகவும், நல்வாழ்வு வாழ இயலாதவர்களாகவும் முத்திப்பேற்றுக்காக முயலமுடியாத-வர்களாகவும் இருக்கும்நிலையை உணர்ந்து ஏக்கமிகஉற்றனர். இவர்கள் இம்மையில் நோயின்றி தெய்வ நம்பிக்கையுடன், தூய நல்வாழ்வாற்றவும் பேரின்ப முத்தியெய்தவும் எளிய-தொரு நன்னெறியைக் காணவேண்டும் என இவரது உள்ளம் நாடவே, அதற்கேற்ற பல உயர்ந்த எண்ணங்கள் அவரது மாசற்ற இதயத்தில் திருவருளால் தோன்றலாயின. அவற்றை தாம் முதலில் கடைப்பிடித்து, அருட்பயன் கண்டு, பிறகு உலகுக்குத் தரவேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர்.

அதிகாலே மூன்று மணிக்கு விழித்துக்கொண்டு வைகைக் கேகி நான்கு மணிக்குள் நீராடிமுடித்து முன்னவனுர் கோயில் ஒன்றில் வழிபாடாற்றி நிட்டையமர்வர். பின்னர் கடைக்கு வந்து கணக்கு வேலே பார்ப்பர். எந்த வேலே பார்க்கினும் அவரது சிந்தை இறை நினேவில் ஒன்றியிருக்கும்.

### திருமணம்

சுப்ரமண்யம் உள்ளத்துறவு மிகுந்தவராயினும், பெற்ருேரது விருப்பமும், இவரது முன்வினேப்பயனும் உடையவன் திருவுளப்பாங்கும் சேர்ந்து இவருக்குத் திருமணம் நடத்தி இவரை இல்லறத்தாராக்கின. ஆயினும் இவர் பற்றற்ற உளத்துடன் பரனருள் நாட்டத்துடன் திகழ்ந்தனர்.

### பரிபூர்ணர் திருக்காட்சி

ஒரு நாள் அதிகாலே இவர் நீராடி இறையருள் நினேவுடன் வைகையின் தென்கரையில் வந்துகொண்டிருக்கையில் மாபெரும் சோதியொன்றைக் கண்டார். உருகிடும் உள்ளத்துடன் அருகில் செல்கையில் அதில் ஒரு விநாயகர் உருவம் தோன்றக்கண்டு ஆனந்தக்கண்ணீர் சொரிய ஓடிச்சென்று தழுவிக்கொண்டு பரவசமாயினர். பின்னர் நினேவுவந்து கண்விழித்துப் பார்க்கையில், தம் கழுத்தில் ஒரு மலர்மாலே இருப்பதையும், விநாயகர் ஒரு கற்சிலேயாக மாறி எதிரில் இருப்பதையும் அறிந்து மகிழ்வு மிக்கவராய் அம்மூர்த்தியை அருகில் இருந்த ஒரு அரசமரத்தடியில் எழுந்தருளச் செய்து **பரிபூர்ண விநாயகர்** எனத் திருப்பெயர் சூட்டி, வைகை நீராட்டி நறுமலர்சாத்தி, அருட்பாடல்கள் பாடி வழிபாடு செய்தனர். அன்பர்பலரும் அரோகரா என ஆரவாரித்தனர்.

இச்செய்தி கேட்ட மக்கள் திரண்டுவந்து பரிபூர்ணரைச் சேவித்து அண்ணலிடம் திருநீறு பெற்றுப் பிணிகள் நீங்கியும், குறைபல தவிர்ந்தும் நிறை நலம் பெற்றனர். மதுரை மக்கள் அண்ணலாரை **'இரெட்டியப்பட்டி சுவாமிகள்'** எனப் போற்றலாயினர்.

### பம்பாய் வாணிபம்

பின்னர் அண்ணலார் அங்காடியரின் விருப்பிற்கிணங்க பம்பாய் சென்று தங்கிக் கப்பல் வாணிபம் நடத்தினர். முன்னரே இவர் இஸ்லாமியருடன் தொடர்பு கொண்டிருந்த

தால் இந்துஸ்தான் மொழியிலும், இஸ்லாமிய வேதமாகிய குரானிலும் தேர்ச்சியுற்று விளங்கினர். இச்செயல் இவரது பம்பாய் வாழ்க்கைக்கு பெரிதும் துணைபுரிவதாய் அமைந்தது. கப்பல் வாணிபத்தால் பெரும் அளவில் பொருள் திரண்ட தாயினும், இவரது தூயமனம் அணுவளவும் பற்றின்றி அருள் மயமாகத் திகழ்ந்தது. ஓராண்டு காலம் கடந்தது. மதுரையில் கணக்குகள் அளவின்றிக் குவிந்துவிட்டதால் சுவாமிகள் மதுரைக்குத் திரும்ப வேண்டிய தாயிற்று.

### பரிபூர்ணர் கோயில் அமைப்பு

சுவாமிகள் மதுரைக்கு வந்ததறிந்த அடியவர்கள் ஆனந்த முற்றனர். அடியவர்கள் சுவாமிகளிடம் அனுமதி பெற்றுப் பரிபூர்ண விநாயகருக்குத் திருக்கோயில் அமைத்தனர். அண்ணலார் உடனிருந்து திருப்பணி நிறைவேறச் செய்து திருக்குட முழுக்கை நடத்திவைத்தனர்.

பக்தியிற் சிறந்து விளங்கிய சிலர்க்குத் தாம் கையாண்டு பயனெய்திவரும் நெறிமுறையினை சுவாமிகள் போதித்து கடைப்பிடிக்கச் செய்தனர். அவர்களும் கடைப்பிடித்து அருள் நிலையில் முன்னேற்ற மெய்தி வந்தனர்.

தாம் புரிந்துவரும் அருட்பணியை மேலும் சிறப்புறச் செய்யவேண்டுமென்றும், அதற்கு மேலும் சிறந்த அருந்தவ மாற்றி அருளாற்றல் நிரம்பப்பெற வேண்டுமென்றும் சுவாமிகளின் உள்ளம் நாடியவண்ணமாயிருந்தது. வெளி வேலைகளைச் சுருக்கிக்கொண்டு உள் நாட்டம் மிகுந்தவராய் ஒரு நாள் அங்காடித்திண்ணையில் அசைவற அமர்ந்தனர். உணவு சுருங்கியது, உரை அடங்கியது. மவுனம் மேற்கொணடு அருந்தவத்து ஆழ்ந்தனர். நாள் செல்லச்செல்ல இவரைப்பார்க்க வரும் கூட்டம் அதிகரித்ததால் அங்காடியர் இவரை வேறோர் இடத்தில் அமர்த்த எண்ணினர்.

ஒருநாள் இரவில் அண்ணலார், யார்க்கும் தெரியாமல் புறப்பட்டுச் செந்தூர் சென்று குற்றாலம் சேர்ந்து சண்பகா தேவி அருவிக்கருகிலுள்ள குகையொன்றில் அமர்ந்து தவம் புரியலாயினர். திருவருள் துணையால் தவநிலையில் உயர்ந்தனர் ஓராண்டாயிற்று இவர் தம் அன்னையாரின் உடல்நிலையைத் திருவருளால் உணர்ந்து இரெட்டியப்பட்டி சென்று அன்னை

யார்க்குத் தொண்டாற்றினர். பிணி நீக்கம் பெறவும் குறை தீர்ந்து நலம்பெறவும் அங்கே கூடிய அன்பர் கூட்டத்தில் சிலரைத்தேர்ந்தெடுத்து அருள்நெறியை உபதேசித்துக் கடைப்பிடிக்கச் செய்தனர். இடையிடையே அருந்தவநாட்டம்மிகுந்தவராய் பொதிகையில் திகழும் அம்பாசமுத்திரம், பாவநாசம், குற்றாலம் முதலிய இடங்களுக்குச் சென்று தவமாற்றுவர். அன்னையாரின் நினைவு தோன்றுங்கால் இரெட்டியப்பட்டிவந்து அன்னையார்க்குத்தொண்டாற்றுவர். இப்படி ஓராண்டு கடந்தது. அன்னையார் உடையவன் திருவடி அடைந்தனர். அவர்களை பூதேவியின் திருவயிற்றில் அடக்கம் (சமாதி) செய்வித்து மவுனத்தமர்ந்தனர். ஒரு மண்டலம் கடந்தது. ஊர்மக்கள் இவர் தவத்தைக் கலைக்க முயல, சுவாமிகள் மீண்டும் குற்றாலம் சேர்ந்து அருந்தவத்து ஆழ்ந்தனர். மேலும் பத்து ஆண்டுகள் கடந்தன. பரிபூர்ணர் திருக்காட்சி கண்டனர். விசுவரூபதரிசனம் கண்டனர். அருள் திருநெறியை உலகுக்கு அருளப் பரிபூர்ணரிடம் அனுமதி பெற்றனர். அருட்சட்டத் திருநெறியைக் கடைப்பிடிக்கும் அடியவர்களைக் காத்தருள்வதாகப் பரிபூர்ணரிடம் உறுதி மொழி பெற்றபின், அண்ணலார் தவம் விட்டெழுந்தனர். அமரர்கள் போற்ற முனிவர்கள் வாழ்த்த அருள் திருநெறியை அவனிக்களித்து அரும் பெருந்துணையாயிருந்து அருளாட்சி புரிந்து வருகின்றனர்.

## அருட்சட்ட நெறியின் சுருக்கம்

1. தினமும் விடியல் 4-00 மணிக்குமேல் 5-00 மணிக்குள் பச்சைநீரில் தலையும் நனைய நீராடவேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ வெந்நீரைப் பயன் படுத்தலாகாது.

3. நீராடிமுடிந்ததும், விநாயகர் கோயிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து வணங்கவேண்டும். (எந்தமதத்தினர் ஆயினும், அவரவர்க்குரிய வழக்கப்படி வழிபாடுசெய்யலாம்.) தண்ணீரில் திருநீறும், துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. இறைவன் ஒருவனே என்ற நம்பிக்கை வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித்தல் கூடாது.

5. புலால் உண்ணல், பொய் பேசல், கள் குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகை பிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல், பொல்லாரோடு உறவாடுதல் முதலியன ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் எய்தினும் எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒருமருத்துவரையோ, ஒருமனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப் பற்றி, உறுதியாக நின்று உயர் பயன் பெற வேண்டும்.

7. நோயுற்றபோது, காலை மாலை இருவேளையும் பச்சை நீரில் முழுகி திருநீறுபூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி, மனமுருகி இறைவனை நாடி, அவன் திருநாமம் மனனம் செய்து, அவன் புகழ் பாடும் தோத்திரங்கள் பாராயணம் செய்து, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடைய வேண்டும். விஷக்கடி, வெட்டு, ரணம், பிரசவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

8. வைத்தியம், ஜோதிடம், மாந்த்ரீகம் இவைகளை நம்பி ஏமாறுமல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி' என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன் இறைவன் அருள் நாடி, அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற்பயன்பெற வேண்டும்.

9. இந்தத் தீது அகன்றுல், இந்த நன்மை கைகூடினுல், இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்துகொள்ளும் பழக்கத்தைக் கைவிடவேண்டும்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக்கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.

11. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து அருள் நிட்டை பேணி ஆனந்தம் எய்தப் பழகவேண்டும்.

12. சட்ட அநுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக

நேர்ந்தால், அதற்காகவருந்தாமல், தகனகிரியை செய்யாமல் மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

13. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும்போது அறக்கடலாகிய இறைவனின் அருள்துணைநாடி, அறமுடிவைப் பெறவேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி, விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

14. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்தவண்ணம், உடல், பொருள், ஆவி, அனைத்தையும் உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகவேண்டும்.

15. சட்டநெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால் அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல் உபாதி:முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து தவறு செய்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு, இறைவனை உருகி நினைந்து வேண்டிக்கொண்டால், உடனே பரிகாரம் கிடைக்கும்; ஏற்பட்ட தண்டனை நிவர்த்தி யாகும்.

16. 'வேலைக்கு ஏற்ற கூலி' என்பது போல, எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பலன் கிட்டுவதையும், தூயநல்வாழ்வு அமைவதையும். இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைத்துச்செல்வதையும், நாம் நன்கு உணர்ந்து, அருள் துணை கொண்டு முன்னேறலாகும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதையும் அதனால் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத்தையும் அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமையாகவோ பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது. ரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி உய்வு பெறுதல் வேண்டும் எனச் சுவாமிகள் அருளியுள்ளார்கள்*

* சுவாமிகளின் வாழ்க்கை வரலாறும், அவர்கள் உலகுக்கு வழங்கியுள்ள அருட்சட்டநெறியின் விவரங்களும் இன்னும் விரிவாகக் காண விரும்புவோர் 'வழிகாட்டும் வான்பொருள்' என்ற உரைநடை நூலிலும், 'கருணைமிகு வள்ளல் அருள்நிறை சரிதம்' என்னும் கவிதை நூலிலும் காணலாம்.

இவ்வாறு சர்வசமய சாரமாக உள்ள அருட்பெரு-நெறியை மாபெருங்கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள், ஆங்காங்கும் பக்குவம் பெற்ற அடியவர் பலரின் இருப்பிடம் நாடிச்சென்று ஆட்கொண்டு அருள்புரிந்து அவர்களின் நல்வாழ்விற்கு அருந்துணையாய் நின்று ஊக்கி வரலானார்கள்.

(1923) துந்துபி ஆண்டு மார்கழி அனுடத்தில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளினர்கள். சுவாமிகள் அவதார-மான அதே இடத்தில் அத்திருக்கோயில் அருளெழிலோடும் அமைந்து திகழ்கின்றது.*

அருட்சட்ட அடியவர்க்கும், அன்பர்கட்கும், அரும்-பெருந்துணையாயிருந்து அருளாட்சி புரிந்து, பேணி வரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அறிந்து ஆனந்தமுறுவது உண்மையிலும் உண்மை.

நாட்டின் பல பாகங்களிலும், வெளிநாடுகளிலும் உள்ள பல இனங்களைச் சார்ந்த பல ஆயிரக்கணக்கான குடும்பத்தினர் இந்த அருட்சட்ட முறைகளைத் தமது வாழ்க் கையில் கைகொண்டு, இம்மை மறுமை நலங்கள் எய்தி வருவதை இன்றும் கண்கூடாகக் கண்டு, எவரும் கையாண்டு நற்பயன் பெற்றுய்யலாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

## சுவாமிகளின் உயர் பண்புகள்

சுவாமிகள் அருளொளிமயமானவர். அவர்கள் அமரும் இடமெல்லாம் தெய்வீக மணம் கமழும். அவர்களின்

* சுவாமிகளின் திருக்கோயிலில் நாள்தோறும் காலை, மதியம், மாலை ஆகிய மூன்று கால பூஜை நடந்து வருகிறது.

ஆண்டுதோறும் புரட்டாசி இரேவதியில் ஜயந்தி விழாவும், மார்கழி அனுடத்தில் குருபூஜை விழாவும், சித்திரைமீ மூன்றாவது வெள்ளியன்று வசந்த விழாவும் திருவருளால் இனிது நடை-பெறுகின்றன.

விழுப்புரம் - திருச்சிராப்பள்ளி குறுக்குப் பாதையில் திருவெண்ணெய்நல்லூர் ரெயில் நிலையத்துக்கருகில் உள்ள அருள் நகரில் சுவாமிகளின் பெயரில் சங்கமும், எட்டாம் வகுப்பு வரை பள்ளியும், இலவச மாணவர்விடுதியும் உள்ளன.

பேச்சிலும் மூச்சிலும் கருணை கனிந்திலங்கும். அவர்கள் உரையெலாம் மறைமொழியாகும். அவர்கள் செல்லுமிடமெல்லாம் எண்ணற்ற உபதேசங்கள் அருளியுள்ளார்கள். அவை பற்றியெல்லாம் நேரிற்கண்டு இன்புற்ற அடியவர் மூலம் உணர்ந்து உகக்கலாம்; போற்றிப் பேணி உய்வு பெற்று விளங்கலாம்.

சுவாமிகள் அடியவர் இல்லங்களில் அருளோடும் சென்று தங்கியிருந்தபோது, சிலசமயங்களில் தம் திருக்கரங்களால் தாளமிட்டபடி குயில்நிகர் குரலால் அருளமுத இசையுடன் பாடிய அருட்பாடல்கள் பல, அவற்றில் சிலவே நமக்குக் கிடைத்துள்ளன

உலகில் தோன்றிய அருளாளர் பலரும் அருளியுள்ள அருள்மறையின் சாரம் அனைத்தும், மிக மேலான கருத்துகள் அனைத்தும் சுவாமிகளின் அருட்பாடல்களில், மிகத்தெளிவாக அமைந்து அனைவர்க்கும் அருள்விருந்தூட்டுகின்றன. சுவாமிகளின் தூய உபதேசங்கள் பல அவற்றுள் பொதிந்து பொலிகின்றன.

சுவாமிகளின் அறுபதாவது குருபூஜை மணிவிழா நன்னாளில், சுவாமிகள் உபதேசமணிகளில் அறுபதுமணிகளின் அருளொளியை, உளத்துட்கொண்டு போற்றி இன்புறுவது உய்வுதரும் எனும் கருத்துடன் சுவாமிகளின் அருள்துணையால் இவ்வருள் நூல் வெளியிடப் பெறுகிறது.

ஆண்டவர் அருள்

இரெட்டியப்பட்டி
10—1—1983

மி. கே. வேங்கடராமன்,
சு. மங்கையர்க்கரசி



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# அன்பு வழி காட்டும் அருளுபதேசங்கள்

பூவுலகில் பிறந்துள்ள நாம் வாழவேண்டியவர்களாக உள்ளோம். வாழவேண்டிய வழியறிந்து வாழ்ந்தால் இன்பமாக வாழலாம். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்பது பொதுமறை. வழியறிந்து வாழ நமக்குத் தெரியாது. அருட்-பெரியார்கள் பலர் தம் பேருணர்வால் உணர்ந்து அரும்பாடு பட்டு உண்மையைக் கண்டுள்ளார்கள். அருள்வாழ்வு வாழ்ந்து பேரின்பம் எய்தினர்கள். தாம் பெற்ற அனுபவத்தை உலகுக்கு உணர்த்தி யுள்ளார்கள்.

உலகில் உயிர்களை ஈர்ப்பது ஆசைவழி. அது துன்பத்தைப் பயக்கும். அவ்வழியிற் சென்ருல் இன்பத்தை அடைய இயலாது. அன்பு வழி நடந்தால் வாழ்வாங்கு வாழலாம். இன்பம் அடையலாம்; 'ஆசைபடப்பட ஆய்வரும் துன்பம் ஆசைவிடவிட ஆனந்தமாமே' என்பது திருமந்திரம். 'இன்பம் இடையருது ஈண்டும் அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்' என்பது திருக்குறள். ஆசை பிறவியைப் பெருக்கி ஓயாத்துன்பத்துள் ஆழ்த்தும். 'அவா என்பது எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து' என்னும் பொய்யாமொழி இதனை உணர்த்தும். "அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு" எனும் பொன்மொழி அன்புவழி பேணுபவரே உயிர் வாழ்பவர் என அறிவுறுத்துகிறது.

அன்புவழி வாழ்ந்து அதில் முதிர்ச்சியெய்தினேர் அருள் மயமானர்கள். 'அருளென்னும் அன்பீன் குழவி' எனத் திருவள்ளுவர் இவ்வுண்மையைக் குறிப்பிடுகிருர். அருளே வடிவமான ஆன்ருேர்கள் உலகுக்கருளிய நல்லுரைகள் உபதேசங்களாகின்றன.

அருள்மயமான நம் குருபரனுர் ஸ்ரீஇரெட்டியப்பட்டி சுவாமிகள் அருளியுள்ள செம்பாகமான அருட்பாடல்களில் கனிவுற்றுத் திகழும் அருளுபதேசங்களை உளங்கொண்டு போற்றி உய்யவேண்டியது நம்மனேரின் தலையாய கடமையாகும்.

சுவாமிகளின் அருட்பாடல்களில் திருமறை திருமுறை, ஆகமம், சரித்திரம், இதிஹாசம், புராணம் ஆகிய இந்துமத நூல்களின் தெளிவான சாரமும், மற்றும் உள்ள சிறந்த சமயங்கள் அனைத்தின் சாரமும் வெகு தெளிவான முறையில் விளக்கமாக அமைந்துள்ளன என்பது உண்மை.

குருபெருமானின் அருட்பாடல்களில் அமைந்துள்ள நுண்பொருள்கள் அனுபவபூர்வமானவை. இந்தப்பாடலுக்கு இதுதான் பொருள் என்று யாரும் அறுதியிட்டுக் கூற இயலாது. தவநிலையில், அருளனுபவத்தில் உயரும் அளவிற்கேற்ப, மேலும்மேலும் சிறந்த பொருள்நுட்பங்கள் விளங்கிக் கொண்டே இருக்கும். இவ்வுண்மையை அனுபவத்தில் தான் உணர இயலும். முதலில் நாம் அவருடைய அருளுபதேசங்களை உளங்கொள்வோம். பின்னர் அவற்றுட் செறிந்துள்ள ஆழ்ந்த பொருள் நுணுக்கங்களை உணர்ந்து போற்றி ஆனந்த முறுவோம்.

## நிலையாமை

1 மனமே நீ இந்த ஜகந்தனில் வாழ்க்கையை
மாயமென்(று) அறிந்திடு நிஜமே

மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்கள் நமக்கு இறைவனுல் கொடுக்கப்பெற்றுள்ளன. காயம் என்பது உடம்பு, அது பருப்பொருளாக நம் கண்ணுக்குத் தெரிகிறது. அதனைத்தொடுவதற்கு முடியும். அதனினும் நுண்பொருளாக வாக்கு அமைந்துள்ளது. அதனைத்தொட முடியாது. காதினுல் கேட்டுத்தான் உணர முடியும். அதனினும் மிகமிக நுண்பொருளாக உள்ளது மனம். அதன் செயல் எண்ணம். அவ்வாறு தோன்றும் எண்ணங்களைக் கொண்டுதான், அவ்வெண்ணங்களை எண்ணும் மனம் ஒன்று உள்ளது என உணர வேண்டியுள்ளது.

மனதில் தோன்றும் எண்ணத்தை வாக்கு வெளிப் படுத்துகின்றது. பிறகு அதற்கேற்ற செயலைச்செய்ய உடம்பு ஈடுபடுகிறது உளம், உரை, உடம்பு ஆகிய மூன்றும் பரந்து விரிந்து அழகுடன் தோன்றும் உலகில் இச்சைகொள்கின்றன. உலகில் காணப்படும் பொருள்களின் உண்மை இயல்பை உணர இயலாத மனம் அவற்ருல் இன்பம் கிடைக்குமென அப்பொருள்கள்மேல் நாட்டம் கொள்வதால் மற்ற கருவி கரணங்களும் அவற்றைப் பெற முயல்கின்றன.

உலகப் பொருள்கள் அனைத்தும் தோன்றி இருந்து மறையக் கூடியவை. அவற்ருல் எய்தும் இன்பமும் உண்மை யான இன்பமாகாது. தொடக்கத்தில் இன்பம் போல் தோன்றி, முடிவில் துன்பத்தில் கொண்டுபோய்ச்சேர்த்து விடும். நம் குருபரனுர் போன்ற அருளாளர்கள் தம் அரும் பெருந்தவத்தால், மெய்ஞ்ஞான நோக்கால், திருவருள் அனுபவத்தால் இவ்வுண்மையை உணர்ந்தனர்.

இவ்வுலக வாழ்க்கையை உண்மையானது, இன்பம் தருவது என்று எண்ணிச் செயல்பட்டு ஏமாற்றமுறும் நம் போன்ற உயிர்களைக்கண்டு இரக்கமுற்று, தம் மாபெருங் கருணையினுல் அறிவுறுத்த எண்ணி, தம் மனத்திற்குச்சொல் வதுபோல் உபதேசங்களை அருளியுள்ளனர் சுவாமிகள்.

'இந்த உலகவாழ்க்கை உண்மையானதன்று; மாயமாய் மறைந்து போகக்கூடியது எனும் உண்மையை மனமே நீ நன்ருக உணரவேண்டும்' என உபதேசிக்கிருர் நம் அருட் குருநாதர்.

சில சமயங்களில் நீரோட்டமின்றிக் காய்ந்துகிடக்கும் ஆற்றின் மணற்பரப்பில், வெகுதூரத்தில் நீர் இருப்பதுபோல் தோன்றும். தாகம் மிகுந்தவொருவன் 'அதோ தொலைவில் நீர் காணப்படுகிறது; சென்று அருந்தலாம் என்று எண்ணி அரும்பாடுபட்டு மணலில் வெகுதூரம் நடந்து சென்ருல், நீர் உள்ளதாகத் தோன்றிய இடத்தில் வெறும் மணல் தான் இருக்கும். நடந்து சென்ற சிரமத்தால் அலுத்துப்போன அவன் மேலும் ஆற்றைப்பார்க்கும் போது, முன்தோன்றியது போலவே வெகுதூரத்தில் தண்ணீர் இருப்பதுபோல் காணப் படும். உண்மையில் அங்கும் தண்ணீர் இராது. இதனைக் கானல் நீர் என நூல்கள் நவிலும். இவ்வுலக வாழ்க்கை அது போன்றதேயாகும் என மெய்ஞ்ஞானிகள் உணர்கின்றனர்.

'கானற்சல மெனவே யுற்றிடு ஜகமாயை' எனத் தம் அருட்பாடலில் மற்ருேரிடத்தில் வண்ண விருத்தத்தில் நம் குருபெருமான் குறிப்பிடுவது இங்கு நினைவுகூறத் தக்கது.

சிற்றின்ப நாட்டம் உடைய மாயமான இவ்வுலகப் பொய்வாழ்வினை நாடி உழலாமல், பேரின்ப அனுபவத்தை நல்கும் மேலான அருள்வாழ்வுநடத்தப் பயிலவேண்டும். அதில் தேர்ச்சியுற்றுப்பரமானந்தம் அனுபவிக்க வேண்டும்; அதுவே பிறவிப்பேறு என்ற உயர்ந்த உண்மையை இவ்வருட் பாடலால் நம் அருட்குருநாதர் உய்த்துணர வைக்கின்ருர் என்பதை உணர்வது அறிவுடைமையாகும்.

2. தேடும் பொருள் எல்லாம் கூடவராது
ஜெகத்தில் வாழ்வை நம்பவொண்ணுது

உயிர்களுக்கு அறிவும் ஆற்றலும் இறைவனுல் தரப்பெற்றுள்ளன உயிர்கள் உலக ஆசைக்குள்ளாகி அழியும் பொருள்கள்மேல் நாட்டம் வைத்து தமக்குக் கிடைத்துள்ள அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி முயற்சி செய்கின்றன. தம் உலக வாழ்விற்கு முடிவுண்டென்பதையும், தாம் சிரமப்பட்டுத் தேடும் உலகப்பொருள்கள் தம் உலக வாழ்வின் இறுதிப் பயணத்தின்போது உடன்வரமாட்டா என்பதையும் உணராமல், உயிர்கள் இவ்வுலகப் பொருள்களைத் தேடுவதிலேயே தம் வாழ்நாள் முழுவதையும் போக்கி விடுகின்றன.

இவ்வுலக வாழ்வு சதமானது என்ற கருத்துடன்தான் நாம் பொருள் தேட முயல்கிருேம். உலக வாழ்வு நிலையானதல்ல என்றும், நாம் தேடும் பொருள்கள் நம் இறுதிப்பயண சமயத்தில் நம்முடன் வாரா என்பதையும் நிச்சயமாக எண்ணும் திர்மானமான உணர்வு ஏற்படவேண்டும். அப்போதுதான், நாம் அழியாப் பொருளான இறைவன் திருவருளையும், அம்மெய்ப்பொருளைத் திரட்ட உதவிபுரியும் தவநிலையையும், அந்நிலையை நாடச்செய்யும் திருநெறியையும், நாடுபவர்களாவோம் என்ற உயர்நோக்கினுல் சுவாமிகள் இவ்வருளுபதேசத்தை நமக்கருளியுள்ளார்கள்.

''மாடு மக்கள் மனை வீடு சுற்றம் அற்பம், வாழ்வுனக்
கேன்? மதிகேடா? — மெத்தத்
தாழ்வெனக்கேன் அதுகூடா — முத்தர்
ஞானவழிக்கிது ஈடா?

என இந்த உயர்கருத்தினை மற்றோரிடத்திலும் நம் குருபரனார் தம் அருட்பாடலில் அருளியிருப்பதை நாம் உணரவேண்டியது அவசியமாகும்.

"நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத(து) எம்பிரான் மன்று"

எனும் ஆன்றோர் வாக்கு இங்கு உன்னற்பாலது.

## காலத்தை வீணிற் கழிக்கலாகாது

**3. வினையினால் ஜெனிக்கும் இத்தேகம் —நீ
வீண்காலம் போக்குவது மோகம்**

நமக்கு இறைவனால் கொடுக்கப்பட்டிருக்கும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கரணங்களின் அசைவினால் எண்ணம், சொல், செயல் என்ற மூன்றும் தோன்றுகின்றன. அவை நல்லவையாயின் புண்ணியத்தையும், தீயவையாயின் பாவத்தையும் சேர்ப்பிக்கின்றன. இந்த நல்வினை, தீவினைக் கேற்பப் பிறவி வந்தமைகின்றது.

"வினைப்போக மேஒரு தேகம்கண் டாய்; வினை மாண்டளவில்
தினைப்போ தளவும்நில் லாதுகண்டாய்"

என்பது பட்டினத்தடிகள் திருவாக்கு.

'புனரபி ஜனனம், புனரபி மரணம்' என ஆதிசங்கரர் 'பஜகோவிந்தம்' என்ற தம் அருள் நூலிற் கூறியுள்ளது போலும், 'கறங்கும் சகடமும் போல் ஜன்மித்துழல' எனக் குமரகுருபரர் 'கந்தர் கலிவெண்பா' என்ற தம் அருள் நூலிற் குறிப்பிடுவது போலும், பிறப்பு இறப்பு எனும் சுழலுக்குள் சிக்கி உயிர்கள் துன்புறுகின்றன.

"நாள் என ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும்
வாள் அ(து) உணர்வார்ப் பெறின்"

என்னும் பொய்யாமொழிப்படி, ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு விநாடியும் நம்மை மரணத்தின் அருகில் அழைத்துச் செல்கின்றன என்பதை உணரவேண்டும்.

குழந்தை பிறந்து ஓராண்டு ஆனதும் ஓராண்டு வளர்ந்து விட்டதாக எண்ணிப் பிறந்தநாள் விழா கொண்டாடுகிறோம். ஒவ்வொருவரும் பிறந்தநாள் வரும்போதெல்லாம் வயது வளர்ச்சியுற்றதாக எண்ணி மகிழ்வுறுகிறோம். உண்மை அது அன்று என்பது ஞானிகள் கருத்து. நமக்கு எத்தனை ஆண்டு காலம் இந்த உலகவாழ்க்கை என நிர்ணயம் செய்து இறைவன் நம்மை அனுப்பியுள்ளான், அதில் இத்தனை ஆண்டு காலம் குறைந்து விட்டதே, பயனில்லாமற் போய்விட்டதே என நாம் வருத்தப்பட வேண்டியவர்களாயிருக்க, அதனை மறந்து, வயது வளர்ந்து விட்டதாக எண்ணி மகிழ்வுறுதல் மடமை என்பது ஞானியர் கருத்தாகும். ஓடுகின்றனன் கதிரவன் அவன்பின் ஓடுகின்றன ஒவ்வொரு நாளாய், என்ற வள்ளலார் வாக்கும், 'போற்றுதே ஆற்ற நாள்போக்கினேனே' என்னும் அப்பர் பெருமான் அருள் வாக்கும் நாம் நினைவு கொள்ள வேண்டும்.

காலம் பொன்னினும் மதிப்புடையது. எத்தனை கோடி பொன் தந்தாலும், சென்று விட்ட ஒரு விநாடியைக்கூட நாம் திரும்பவும் பெற முடியாது.

ஆதலால் நாம் காலத்தை வீணிற் போக்கலாகாது, இறைவனிடம் சிந்தனையைச் செலுத்தி, இறைவன் திரு நாமத்தை எண்ணி உருகுவதும், இறைவன் திருவருளை நினைந்து போற்றுவதும், இறைவன் துதிப்பாடல்களை உருக்கமுடன் பாடுவதும், இறைவன் திருவருட் பெருமைகளைப் பன்னிப் பன்னி பக்தியுடன் பேசி இன்புறுவதும், இறைவனின் அருட்பணிகளை ஆர்வமுடன் செய்து கொண்டிருப்பதும் உயிர்கள் செய்ய வேண்டிய கடமையாகும். இவைகளைச் செய்யாமல், ஆசைக்குள்ளாகி, மற்றக் காரியங்களைச் செய்து கொண்டிருப்பவர்கள் வீண் செயல்களைச் செய்து கொண்டுள்ளனர் என்பது ஆன்றோர் கருத்து.

" தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற் றல்லார்
அவம்செய்வார் ஆசையுட் பட்டு "

என்னும் திருக்குறள் இக்கருத்தை நன்கு விளக்குகிறது. ஆதலால் நாம் நமக்கு கிடைக்கும் நேரத்தை அவப்பொழுதாக்காமல், தவப்பொழுதாக்க வேண்டும் என்று சுவாமிகள் நமக்கு அறிவுறுத்துகிறார்கள்.

4. ஒன்பது வாயிலின் ஊத்தைச் சரீரத்தை
உள்ள நாளெல்லாம் சுமந் தலேந்து
நன்று தீ தென்று தெரியா மல்நீ
நாடெங்கும் சுற்றினுல் ஆவதென்ன?

உயிர்களுக்கு இறைவனுல் உடம்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் ஒன்பது வாயில்கள் உள்ளன. ஒவ்வொரு வாயில் வழியாகவும் அழுக்கு வெளியாகிக்கொண்டிருக்கிறது. அதுமட்டுமன்றி, உடம்பு மொத்தத்திலும் அழுக்கு வெளியாகிக்கொண்டே இருக்கிறது. தூய்மை செய்யக்கூடிய எத்தனே பொருள்களைக் கொண்டு எவ்வளவு தூய்மை செய்தாலும், நறுமணமூட்டும் எத்தனே பொருள்களைப் பூசிக் கொண்டாலும், மீண்டும்மீண்டும் துர்மணம் வீசிக்கொண்டே இருச்கிறது, ஆகையால், ஞானிகள் இவ்வுடம்பை ஊத்தைச் சரீரம் என்று கூறினர்.

இதனே, தூய உடம்பாக, உயர்ந்த உடம்பாக மாற்றிக் கொள்ளும் வழியைப் பேரருளாளர்கள், மெய்ஞ்ஞான சித்தர்கள் உணர்ந்திருந்தார்கள். அத்தகைய மேலான சாதனங்களைக் கொண்டு பலர் வெற்றி பெற்றுள்ளார்கள்; பூர்ண பலன் எய்தியுள்ளார்கள்.

உயிரையும் உடம்பையும் தூய்மை செய்யும் அரும்பெருந்தவத்தை மேற்கொண்டார்கள். "சுடச்சுடரும் பொன் போல் ஒளிவிடும்; துன்பம் சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" என்னும் பொதுமறைக்கேற்ப, தாம் மேற்கொண்ட கடுந்தவத்தின் பயனுய் உயர்ந்த அருள் நிலேயடைந்து, தூய ஒளித்திருமேனியை பெற்றொளிர்ந்தார்கள் இந்நிலேயை 'சொர்ணதேகம் பெறுதல்' என இராமலிங்க. சுவாமிகள் குறிப்பிடுகிறுர்கள்.

மேலும் சிறந்த கடுந்தவம் புரிவோர், இன்னும் உயர்ந்த அருள்நிலேயெய்தி, மிகத்தூயதான ஒலித்திருமேனியைப் பெற்றிலங்குகிறுர்கள். இத்தகைய தூய திருமேனியை 'பிரணவதேகம்' என இராமலிங்க சுவாமிகள் குறிப்பிடுகிறுர்கள்.

மேலும் உயர்ந்த மாதவம் புரிவோர் அதனினும் உயர்ந்த அருள்நிலேயெய்தி, மிகமிக மேலான மெய்யறிவுத்

திருமேனி பெற்று விளங்குவார்கள். இத்தகைய பேரருள் திருமேனியை 'ஞானதேகம்' என இராமலிங்க சுவாமிகள் குறிப்பிடுகிறார்கள்.

இத்தகைய தூய திருமேனிகளைப் பெற்றுத் திகழும் பேரருளாளர்களை, மெய்ஞ்ஞான சித்தர்களை, பஞ்ச பூதங்களும், கதிரவன் ஒளியும், நஞ்சு போன்ற ஏனைய பொருள்களும், கொடிய விலங்குகளும், பிறவும் எத்தகைய தீங்குக்கும் துன்பத்துக்கும் உட்படுத்த இயலாது. திருநாவுக்கரசு நாயனார், பிரஹ்லாதாழ்வார் முதலிய பேரருளாளர்களின் அருள் வரலாறுகள் இதற்கு சான்றாய் அமைந்து பொலிகின்றன.

''தரிக்கிலேன் காய வாழ்க்கை'' என்று பாடிய மணிவாசகப் பெருமான் ''சிவமாக்கி யெனை ஆண்ட அத்தன்'' என்று தாம் பெற்ற உயர் பேற்றைக் குறிப்பிடுகிறார்.

இவ்வுலகத்தி லிருக்கும்போதே, இறவாத, இனி பிறவாத முத்தி நிலையைப் பெறுதல் வேண்டும்; பெறுதல் கூடும் என்று அருட்பெரியார்கள் பறை சாற்றியுள்ளனர். அம்முக்திநிலையை இரண்டு விதமாக ஆன்றோர்கள், கூறியுள்ளனர். அவை ஜீவன் முத்திநிலை, விதேக முத்திநிலை என்று குறிப்பிட்டுள்ளார்கள். உலகில் வாழும்போதே ஜீவன் முத்திநிலை அடைய வேண்டும் என்றும், உலக வாழ்வு முடிந்த பின், விதேக முத்தி பெற வேண்டும் என்றும் விளக்கியுள்ளார்கள்.

ஆனால் நம் குருபரனாகிய இரெட்டியப்பட்டி சுவாமிகள் 'சித்தம் தெளிந்திடுதேனே' என்று தொடங்கும் தம் அருட்பாடலில், 'விதேக முத்தி பொருந்திடுமானே' என்று விதேகமுத்தி இங்கேயே பெறுதல் வேண்டும் என அருளியுள்ளார்கள். அதனை அடையத்தக்க சிறந்த சாதன முறைகளையும் தெளிவாக விளக்கியுள்ளார்கள்.

அத்தகைய மேலான அருள்நிலைகளையெல்லாம் அடைய வேண்டியது, உயிர்களின் குறிக்கோளாக இருக்க, நல்லது எது, தீயது எது, என்று அறிந்து நல்லனவற்றைச் செய்து உயர் நிலையெய்த முயலாமல், ஏதேதோ வேலைகள் இருப்பதாகவும் அவை நம்மைக் காப்பாற்றும் என்றும் தவறாக எண்ணிக்

கொண்டு நாடெங்கும் சுற்றினுல் என்ன நற்பயனை எய்த இயலும்? என்று சுவாமிகள் நமக்கு அறிவுறுத்துகிருர்கள்.

5. கள்ள மனதைக் கசடறுத்து அந்தக்
கள்ளனைக் கண்டு பிடியாமல்
வெள்ளம் வரும்போ(து) அணைபோடக் கூடுமோ
மெல்லிய லேசற் றுணர்வாயே

நமக்கு கிடைத்துள்ள கருவி கரணங்களில் மிக விசித்திரமானது, மிகச்சூக்மமானது மனம் அது கள்ளத்தனமுடையதாக உள்ளது. மனதிற் கள்ளம் உள்ள வரையில் நாம் இறைவனைக்காணமுடியாது. இறைவன் எங்கும் நிறைந்தவன். ஆனுலும், கள்ள மிக்க மனத்தினர் காண்பதற்கரியவன் ஆகின்றுன்.

மனத்தில் உள்ள அழுக்கு நீங்கினுல் இறைவனைக்காண இயலும். இறைவனைக் கள்வன் என ஆன்ருேர் பலர் கூறி உள்ளனர். கள்வன் கொள்ளையடிப்பான், பிறர்கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருப்பான், இறைவன் எளிதில் எவரும் காண இயலாமல் மறைந்திருப்பதாலும். அடியவர் தம் உள்ளங்களைக் கொள்ளை கொள்வதாலும் 'கள்வன்' எனப்படுகிருன். 'உள்ளம்கவர் கள்வன்' என்பது சம்பந்தர் தேவாரம்.

பாசக்கடலை அறுத்திடுவான் அவன்
பாசாங்கு செய்திடும் கள்வனடி
கூசாமல் தூது நடந்திடுவான் அவன்
கொள்ளை யடிக்க வல்லவண்டி

என்பது நம் குருபெருமான் அருட்பாடல்.

மனத்தில் உள்ள கள்ளத்தை நீக்கி, ஆசை ஆணவாதிகளை அகற்றி, நம்முள் மறைந்திருக்கும் இறைவனின் அருட்காட்சியைக் காண வேண்டும். மனத்தின் அழுக்கை எளிதில் நீக்க இயலாது அதற்கேற்ற சாதனங்களை மிக ஊக்கமாகக் கைக்கொள்ளவேண்டும். ஓயாது முயல வேண்டும். நெடுநாள் முயன்ருல்தான் பயன் பெறமுடியும்.

நாம் எத்தனை நாள் இருப்போம் என்று நமக்குத் தெரியாது இறப்பு என்னும் பெருவெள்ளம் எப்போதுவந்து நம்மைக் கொண்டுபோய்விடும் என்பதை உணர இயலாது. உடம்பு இருக்கும்போதே உள்ளே உள்ள இறைவனைக்கண்டு

அருள்பெற வேண்டும். உடம்பினுற் பெறவேண்டிய பயன் அதுவே ஆகும்.

"உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம்,
உடம்பினுள் உத்தமனைக்காண்" என்பது ஔவைக்குறள்.

இறப்பு வந்தால் மீண்டும் பிறப்பு வரும். இறப்பு பிறப்பை வெல்லுவதே பிறவிப்பேருகும். இறப்பு எனும் வெள்ளம் வரும்முன், அணைபோட வேண்டும். அதுதான் இறைவன் திருவடி பெறுதல், முத்திப்பேறடைதல் என்று போற்றப்பெறும் அந்நிலையடைந்து விட்டால் அதுவே இறவாநிலையாகும், பிறவாநிலையுமாகும்.

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல தலைப்பட்ட வர்க்கு" என்பது வள்ளுவர் வாக்கு.

புலன்களைச் செல்லும் வாயெல்லாம் விடாமல் இறைவனின் காவலுக்குள்ளாக்கி, இறைவன் திருநாமத்தோடு ஒன்றித் தவத்தில் மேல்நிலையெய்தியதால்,

"நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே"
என்று பாடுகிறார் தொண்டரடிப்பொடி யாழ்வார்.

இறைவனாகிய நாயகனை அடைந்து பேரின்பம் பெற வேண்டும். பக்குவப்பட்ட ஜீவாத்மாவை நாயகியாகக் குறிப்பது ஆன்றோர் மரபு. பக்குவப்பட்ட உயிரை 'மெல்லியலே' என்று சுவாமிகள் விளிக்கிறார் எனக் கொள்ளலாம்.

6. பொய்யோ மெய்யோ என்று புகலாதே — மெய்யை அகலாதே — தெய்வம் விலகாதே — பதம் பொருந்த அருந்தவங்கள் செய்ய நினைப்பாய்

இறைவனைப் பற்றி எண்ண நேரும் போதெல்லாம் மக்களிற் பெரும்பாலோர்க்கு இறைவன் உளன் என்பது பொய்யோ? மெய்யோ என்ற சந்தேகம் தோன்றுகின்றது. பொய் போலும் என்ற எண்ணம் மிகுந்திருப்பதால் பொய்யோ? என்ற சொல்லை முதற்கண் கூறினர் சுவாமிகள். மனத்தில் சந்தேகம் இருப்பதால் சொல்லிலும், அவ்வாறு சொல்ல நேருகிறது. அவ்வாறு சொல்வது கூடாது என்று அண்ணலார் அருளியுள்ளார்.

ஏன் சொல்லக்கூடாது? என்றால், இறைவன் மெய்ப் பொருளாதலால் என்றும் உள்ளவன்; ஆதி அந்தம் இல்லாதவன் என்றெல்லாம் அனுபவம் மிக்க ஆன்றோர்கள் கூறுகின்றனர். எங்கும் நிறைந்தவன், எல்லாமானவன், எல்லாம் வல்லவன் என்றெல்லாமும் கூறுகின்றனர், இறைவன் மண், நீர், தீ, காற்று. ஆகாயம் சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டு உருவாகித்திகழ்கிறான் என்பர் மேலோர். அதனால் இறைவனுக்கு 'அட்டமூர்த்தி' என்று ஒருதிருப்பெயர் உண்டு.

"அட்டமூர்த்தி அண்ணாமலை கைதொழ
கெட்டுப்போம் வினை கேடில்லை காண்மினே"

என்பது அப்பர் சுவாமிகள் தேவாரம். உண்மைப் பொருளாகிய இறைவனைச் சார்ந்திருந்தால்தான் உயிர் இன்பம் பெறமுடியும். உயிரின் இயல்பு சார்ந்ததன் தன்மையாதல். உலகப் பொருள்களைச் சார்ந்திருக்கையில், அதன் மயமாகிறது; துன்பம் அடைகிறது. பதியாகிய இறைவனைச் சார்ந்திருக்கையில் இன்பம் அடைகிறது என்பது சித்தாந்தம். இறைவனைச் சார்ந்திருக்கும் உயிருக்குப் பிறவியினால் உண்டாகும் துன்பம் நீங்கி விடுகின்றது.

" இற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றனோடு
உற்றோமே யாவோம், உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்று"

என்பது கோதைப் பிராட்டியின் திருப்பாவை.

மெய்ப்பொருளாகிய இறைவனைச் சார்ந்திருக்க வேண்டியது அவசியம். மற்றைப் பொருளில் நாட்டம் உண்டாயின், மனம் இறைவன் நாட்டத்தினின்று விலகிவிடு-மாதலால், வேறுநாட்டம் கொள்ளாமல் இறை நாட்டத்தில் இருப்பாயாக என்று கூறும் சுவாமிகள் 'மெய்யை விலகாதே' என்று அருள்கிறார்.

மற்றோர் உண்மையையும் உணரவேண்டியது அவசியம் என வற்புறுத்துகிறார். அதாவது நீ இறை நாட்டத்தைவிட்டு விலக முயன்றாலும், இறைவன் உன்னை விட்டு விலகுவதில்லை என்று உணர்த்துகிறார்.

"இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்" என்பது திருவாசகம். 'உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது'

என்பது திருப்பாவை. 'எவ்வுயிர்க்கும் பின்னமற நின்ற பெருமான்' என்பது கந்தர் கலிவெண்பா. 'செறிதரும் உயிர்தொறும் திகழ்ந்து மன்னிய மருவறும் அரன்' என்பது கந்தபுராணம். 'என்னை நீ விடுவதே இல்லை' என்பதும் 'உனக்கும் எனக்கும் அந்நாள் உறவு பற்றிய காலம் ஒன்ருய்க் கலந்திருந்தது உண்மை; ரகசியம்' என்பதும் குருபரனுர் அருட்பாடல்.

நாம் விடநினைத்தாலும், இறைவன் நம்மை விடுவதில்லை. நம்மை ஆட்கொண்டருளி, புனிதமுறத் திருத்தி, அருந்தவத்தில் ஈடுபடுத்தி, தேர்ச்சியுறச் செய்து, பேரின்ப வீட்டை அருள்வதே தன் கடமை எனக்கொண்டு, இறைவன் ஒருகணமும் நம்மை விலகாது இணைந்திருக்கிருன். இக்கருத்தை விளக்கவே, 'தெய்வம் விலகாதே' என்று சுவாமிகள் அருளியுள்ளார்கள்,

இதை உணர்ந்த நாம் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதை சுவாமிகள் நமக்கு உணர்த்துகிருர்கள். இறைவனுடைய திருவடியில் ஒன்ற வேண்டும் என்ற எண்ணம் கொள்ள வேண்டும்.

'யான் எனது என்றற்ற இடமே திருவடி' என்கிருர் குமரகுருபர சுவாமிகள், 'யான் எனது என்னும் செறுக் கறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்' என்பது திருக்குறள். இறைவன் திருவடி அடைவது என்பது எளிதானதல்ல, அதற்கேற்ற அருந்தவம் புரிந்தாக வேண்டும். அருந்தவம் புரியவேண்டும் என்ற நாட்டம் முதலில் உண்டாக வேண்டும், அந்நினைவு தீவிரமாக உண்டானுல்தான், அதற்கேற்ற சாதனங்களில் மனம் ஈடுபடும். ஆதலால் அருந்தவ நாட்டம் முதற்கண் தேவை என்பதை உணர்த்தவே "பதம் பொருந்த அருந்தவங்கள் செய்ய நினைப்பாய்" என அருளியுள்ளார்.

சுவாமிகளின் சட்ட நெறிப்படி நடப்பதே தவ வாழ்வாகும்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு"

என்பது வள்ளுவர் வாய்மொழி.

உடல் பொருள் ஆவி அனைத்தையும் இறைவன்பால் ஒப்படைத்து, எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத் தகைய சிக்கல் ஏற்படினும், 'எல்லாம் இறைவன் செயல்' என்னும் துணிவுடன், தளராத உறுதியுடன் அருள்வாழ் வாற்றலே சட்டநெறியாகும். ஆதலால் அதுவே குறிக் கோளாகும் என்பது உணரற்பாலது

## 7. சாதனம் உள்ளவர்க்கு அருள் தந்த சாட்சியும் போதாதோ?

இறைவன் திருவடி அடைய வேண்டும் என்பது நமது குறிக்கோள். அக்குறிக்கோளை அடைய நாம் அருந்தவம் செய்ய வேண்டும். சுவாமிகளின் சட்ட நெறியில் நடப்பதே தவ வாழ்வாகும். அதற்கேற்ற வகையில் நம் வாழ்க்கை முறையை வகுத்துக்கொள்ள வேண்டும். அதுவே அதற்கேற்ற சாதனம் ஆகும்.

நம் நினைவு மொழி, செயல் அனைத்தும் அதற்கேற்ற வாறு அமைய வேண்டும். மனம் குரங்கு போன்றது. ஒன்றை விட்டொன்று பற்றும். ஓரிடத்தில் நிலைத்து நிற்காது.

'வனக்குரங்கும் வியப்ப என்றன்
மனக்குரங்கு துடித்த துடிப்படக்கி'

என்பது இராமலிங்க சுவாமிகள் அருட்பா. மனத்தை முதலில் இறைவழிப்படுத்த வேண்டும். அதற்கும் அவன் அருள் துணைபுரிய வேண்டும். 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' என்னும் மணிவாசகம் இக்கருத்தை விளக்கும்.

தக்க முறைப்படி தம் வாழ்க்கையை வகுத்துக் கொண்டு, அருள்நெறி பேணிய சான்றோர் பலர்க்கும் இறைவன் அருள் புரிந்துள்ளான் என்பதைப் புராணங்கள் நமக்குப் போதிக்கின்றன தூயோர் பலரின் அருள் வரலாறுகள் தெளிவாக விளக்குகின்றன. அருள்நெறி பேணும் உண்மையன்பர்க்கு இறைவன்அருள்புரியும் சிறப்பை இன்றும் கண்கூடாகக் காண்கிறோம். நாம் உயர்ந்த தவ நிலையெய்தவில்லையென்றாலும், நம்முடைய உறுதிக்கேற்ப, நம்முடைய உள்ளன்பிற்கேற்ப இறைவன் தாராளமாகவே அருள்புரியும் சிறப்பை மிக நன்றாக உணர்கிறோம்.

இதையெல்லாம் நோக்கும்போது, நமக்குப் பூர்ண மான நம்பிக்கை இறைவன் மீது உண்டாக வேண்டுமல்லவா? அப்படி உண்டானுல், அது செயல் முறையில் பரிமளிக்கும் அல்லவா? என்று குறிப்பிடவே 'சாதனம் உள்ளவர்க்கு அருள் தந்த சாட்சியும் போதாதோ?' என்று வினவுகிருர் சுவாமிகள்.

மார்க்கண்டேயர் அருந்தவம் புரிந்து மறலியை வென்றதும், பகிரதன் பெருந்தவம் புரிந்து கங்கையைக் கொணர்ந்ததும் உலகறிந்த வரலாறுகளாகும்.

## நெறிதவருது நித்திய கர்மம் செய்

8. நித்திய கர்மங்களைக் கல்லு—அதன்
நெறிகள் தவறலாமோ விள்ளு.

இறைவன் திருவடி அடைய வேண்டியது பிறவிப் பயனுகும் அதனை அடைவதற்கு அருள்நெறி பேணவேண்டும். அருள்நெறி பேணுவோர், நாள்தோறும் என்ன என்ன செய்யவேண்டும் என்பதை முதற்கண் தெளிவாக உணர வேண்டும். பின்னர் அதில் சிறிதும் தவருது முறைப்படி நடத்தல் வேண்டும்.

செய்யவேண்டிய கர்மங்கள் அதாவது செயல்கள் யாவை என உணர்ந்த பின், அச்செயல்களைச் செய்யப் பயிலவேண்டும். அனுபவம் மிகுந்தோர்களிடம் சென்று கேட்டு பழகி முறைப்படி சரியாகச் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். ஐயம், திரிபு - அதாவது சந்தேகம் மயக்கம் இன்றித் தெளிவான முறையில் கற்றுக்கொள்ள வேண்டும். கற்றுக்கொண்ட வண்ணம் நடந்து முன்னேற வேண்டும். அதினின்று அணுவளவும் தவருது நடந்து மேல்நிலையடையப் பாடுபட வேண்டும்.

தவறி நடந்தால் தண்டனை உண்டாகும் என்ற அச்சம் கொள்ள வேண்டும். சற்றும் தவருமல் நடந்தால் நிச்சயம் பயன் பெறலாம் என்று சுவாமிகள் உணர்த்துகிருர்கள். நித்திய கர்மங்கள் யாவை என்பதை அடுத்து வரும் உபதேசத்திற் காணலாம்.

## சட்ட நெறிப்படி நட

9. விடியுமுன்நதி தனிலே மூழ்கி
விநாயகன் பதமே பணிந்து நீ
வெந்நீர் ஸ்நான பானம் தள்ளுவாய்—பூசும்
வெண்ணீ(று) அவிழ்தமென்று கொள்ளுவாய்

நாள்தோறும் பொழுது விடிவதற்கு முன் அதிகாலையில் நான்கு மணிக்குமேல் ஐந்து மணிக்குள் ஆற்று நீரில் அல்லது ஊற்று நீரில் அதாவது பச்சை நீரில் தலையும் நனையுமாறு நீராட வேண்டும். ஆற்று நீரோ, ஊற்று நீரோ கிடைக்காவிடின், ஏரி, குளம், கிணறு ஆகியவற்றின் நீரை உபயோகித்து நீராடலாம் பச்சைத் தண்ணீரில் மூழ்க வேண்டும் என்பதை மறத்தலாகாது. நான்கு மணியிலிருந்து ஐந்து மணிக்குள் மூழ்கவேண்டும் என்பது மிகமிக அவசியம்.

அந்த நேரத்தில் தண்ணீருக்கு ஒரு சிறந்த தெய்வீக சக்தி இருக்கிறது. அந்த நேரத்தில் பச்சைத் தண்ணீரில் மூழ்குவோரின் உடம்பிலுள்ள நோய்கள் நீங்கும் புதிய நோய்கள் பற்ருவண்ணம் தடைப்படுத்தும். நாடி நரம்புகளுக்கு முறுக்கேற்றி நல்ல ஆற்றலை உண்டாக்கும் தெய்வீக சக்தியை வளர்க்கும். இறையருளில் தவநிலையில் முன்னேற்றத்தை உண்டாக்கும். ஆதலின் இந்நற்செயலை நம் அருட்குருபரனுர் அருட்சட்டத் திருநெறியின் நுழைவாயிலாக அமைத்துள்ளார் என்பதை உணர வேண்டும்.

நீராடி முடிந்ததும் ஒரு விநாயகர் கோயிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து அவரது திருவடிகளில் நாட்டத்தை வைத்து மனமுருகி வழிபட்டு வணங்கி அருள் பெற வேண்டும்.

(அந்தந்த மதத்தவர் அவரவர் வழக்கப்படி வழிபாடு செய்யலாம்.)

குளிப்பதற்கும் குடிப்பதற்கும் வெந்நீரைப் பயன் படுத்தாது விடுத்தல் வேண்டும்.

உள்ளும் புறமும் தூய்மையாதற் பொருட்டு தூய வெண்மையான திருநீற்றை அணிய வேண்டும். பிறவிப் பிணி முதல், சகலவிதமான பிணிகளையும் போக்கும் அருமருந்து

இத்திருநீறு என்ற மனப்பூர்வமான எண்ணத்துடன் அணிந்துகொள்ள வேண்டும்.

அணிந்துகொள்வது மட்டுமன்றி (துளசியுடன்) அத்திருநீற்றைத் தண்ணீரிலிட்டு உள்ளுக்கும் பருக வேண்டும். தீரா நோய்களையும் தீர்க்க வல்லது திருநீருகும்.

"அருநோய்கள் கெட வெண்ணீறு அணியாராகில்"

என்பது திருநாவுக்கரசர் தேவாரம். அவருக்குற்ற மிகக் கொடியதான சூலை நோய் இறைவன் திருவருளால் நீங்கப் பெற்றதும் திருஞானசம்பந்தர் கூன்பாண்டியனுக்குற்ற வெப்பு நோயைத் திருநீறு கொண்டு தீர்த்தருளியதும் உலகறிந்த உண்மை.

இறைவனின் திருவருள்மயமான திருநீற்றைத் தவிர வேறு எந்த மருந்தையும் அருட்சட்ட அடியார்கள் நாடலாகாது என்ற உயர்கருத்தை சுவாமிகள் இங்கு உணர்த்துகின்ருர்கள்.

10 தெய்வம் ஒன்றேயென்று முடிவாய்—கண்டு
தேவதா பிரார்த்தனை விடுவாய்

உயிர்கள் எப்போதும் தெய்வ சிந்தனையுடன் இருக்க வேண்டும். எல்லா உலகங்களையும் எல்லாப் பொருள்களையும், எல்லா உயிரினங்களையும், படைத்து, பேணி, இயக்கி அருளாட்சி புரிந்து வரும் இறைவன் ஒருவனே என்ற தீர்மானமான எண்ணம் வேண்டும். 'ஒருவனே தேவன்' என்பது திருமூலர் மந்திரம். யார் எப்பெயரிட்டு எவ்வாறு அழைத்தாலும் அம்மூலப் பொருளையே சாரும். எனவே மத இன வேறுபாடுகளை மறந்து எல்லோரும் ஒரே தந்தையின் மக்கள் என்ற உணர்வு ஓங்கப் பெற்றவர்களாய் ஒருமைப் பாட்டுணர்வு மிக்கவர்களாய் ஒரே சிந்தனையுடன் வாழவேண்டும் என்பதே சுவாமிகள் கருத்து.

நம் வாழ்க்கைக்கு மிக அவசியமான இந்த உலகத்தையும், உடம்பையும், கருவிகரணங்களையும், எல்லாச் செல்வங்களையும் படைத்தளித்துள்ளவன் எல்லாம் வல்ல இறைவன்

நமக்கு ஒவ்வொரு விநாடியும் அரும்பெருந் துணையாய் அமைந்து, ஊக்கி போகங்களைப் புசிப்பித்து போதமூட்டி வளர்ப்பவன் இறைவன். அவனைச் சிந்தித்தலும், துதித்தலும், தொழுதலும், அவன் அருட்பணிகளைப் புரிதலும் உயிர்கள் அனைத்தும் ஆற்றவேண்டிய உயர் கடமையாகும்.

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்பது திருக்குறள்

உயிர்களுக்கு எவ்வெக்காலத்தில் என்னென்ன அளித்து உதவவேண்டும் என்பதை உணர்ந்து அளித்துப் பேணி வருபவன் இறைவன். அவன் எல்லாம் உணர்ந்தவன். நாம் ஒன்றும் அவனுக்கு உணர்த்த வேண்டிய அவசியமில்லை; அவனுக்கு உணர்த்தக்கூடிய ஆற்றலும் உயிர்களாகிய நமக்கில்லை.

அவன் எல்லா இடத்தும் நீக்கமற நிறைந்துள்ளான். அணுவுக்கணுவாகி, அப்பாலுக்கப்பாலாய் என்பது ஔவைப் பிராட்டியார் அருள்வாக்கு.

அவனிடத்து நம் குறைகளை விண்ணப்பித்துக்கொள் வதால் தவறில்லை. குறைகளை நீக்கி அருள்புரியுமாறு வேண்டிக்கொள்வதிலும் தவறில்லை. நீ என் குறை நீக்கி அருள்புரிந்தால், நான் உனக்கு இது செய்கிறேன் என்று பிரார்த்தனை செய்து கொள்வது தவறாகும்.

இறைவனுக்கு நம்மால் ஆக வேண்டியது எதுவுமே இல்லை. உலகம் முழுவதும் அவனுடைய உடைமை. அனைத்துக்கும் உடையவனாக அவன் இருப்பதால் அவனை உடையவன் என்கிறோம்.

ஆதலால் பிரார்த்தனை செய்துகொள்ளும் பழக்கத்தைக் கைவிட வேண்டும் என சுவாமிகள் அருளி யுள்ளார்கள்.

## அன்புசெய்

11. அன்பினைப் பெறுவாயாகில்
அதர்மங்கள் அனைத்தும் நீங்கித்
துன்பமும் தவிர்ந்து போகும்

மணிவாசகப் பெருமான் இறைவனை அன்பே என அழைக்கிறார்.

"ஈறிலாப்பதங்கள் யாவையும் கடந்த
இன்பமே என்னுடை அன்பே"
—கோயில் திருப்பதிகம்

"அன்பு சிவமென்(று) இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே"
—திருமூலர் திருமந்திரம்

'அன்பிலா உயிரை அறம் காயும்' என்பது திருக்குறள்,

அதனால் அன்புடையவரை அறம் பேணும் என்பது பெறப்பட்டது. 'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது' என்னும் திருக்குறளை நாம் உளம் கொள்ள வேண்டும்.

அன்புடைப் பெரியோர் தனக்கென வாழார்; பிறர்க்குரியவராய்த் திகழ்வர்.

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"

என்னும் திருக்குறள் இதனைத் தெளிவுற உணர்த்தும்.

இறைவன்பாலும், உயிர்கள்பாலும் அன்புடன் வாழ வேண்டியது அடியவர் கடமை. அவ்வாறு வாழ்வாற்றின் மனம் மொழி செயல் அனைத்திலும் அதர்மங்கள் நீங்கி அறம் நிலைபெறும்.

அன்பும் அறமும் நிலைத்துள்ள இடத்தில் துன்பம் தலை காட்டாமல் நீங்கிவிடும். இன்பமே என்றும் நிலைத்திருக்கும்.

அன்புமயமான அப்பர் பெருமான் 'இன்பமே; எந்நாளும் துன்பமில்லை' என்று அருளியதை உணர்ந்தால் நம் குரு பெருமானின் கருத்து நமக்கு நன்கு விளங்கும்.

"தீதும் நன்றும் பிறர்தர வாரா." என்பது சங்க காலச் சான்றோர் உரை. நமக்கு நாமே துன்பத்தைத் தேடிக் கொள்ள விழைவோமா? மாட்டோம். நமக்கு நன்மை வேண்டும் எனில் நாம் பிறர்க்கு அன்பு செய்யவேண்டும். நாம் என்ன செய்கின்றோமோ அதுவே நமக்குத்திரும்ப வரும் என்பது தெளிவு. கொடியவர்களையும் அன்பினால் மாற்ற முடியும். முழுமையான அன்பு நாம் செலுத்தினால் அந்த அன்பு அதர்மத்தினை அழிக்கும்; தர்மத்தை நிலை நாட்டும். உலகில் அதர்மம் முற்றும் நீங்க வேண்டும் எனில் ஒரேவழி அன்பு வழிதான். அந்த அன்பே உயிர்ப்பு. இறையுணர்வு மிகப்பெற்ற ஞானியர் அனைவரும் அன்பு மீதூரப் பெற்றவ ராகவே விளங்கினர், விளங்குகின்றனர், இனியும் விளங்குவர். நாமும் அன்பு நெறியைக் கைக்கொண்டால் அதர்மங்கள் அழியும்; துன்பமும் இல்லை. அதர்மமற்ற, துன்பமற்ற இன்ப வாழ்விற்கு அடிப்படை அன்பே என்பதை சுவாமிகள் உணர்த்துகின்றார்கள்.

## குரு அருளால் வரும் பயன்

12 ஆணவம் மாயை கன்மம் அகற்றும்சற் குருபாதம்
காண உருகிநாடிக் கண்டால் தெளிவு வரும்.

ஆணவம் கர்மம் மாயை என்ற மும்மலங்கள் உயிரைப் பற்றியிருப்பதாகவும், அதனால் நமக்குத் தெளிவு பிறக்கவில்லையென்றும் சாத்திரங்கள் கூறுகின்றன.

நாம் மாயைக்குள் சிக்கியிருப்பதால், அழியும் பொருள்களை மெய்ப்பொருள்களாகக் கருதி அவற்றை அடையப் பாடுபடுகிறோம். நாம் முற்பிறவிகளில் ஆற்றிய நல்வினை (புண்ணியம்), தீவினை (பாவம்) என்னும் இருவினை களும் நமக்கு இன்பத்தையும் துன்பத்தையும் தந்து கொண்டுள்ளன. ஆணவ மலம் நாம் யார் என்பதையும், நம் தலைவன் யார் என்பதையும் உணரவொட்டாமல் தடுக்கிறது.

இம்மூன்று மலங்களும் அகன்றால் தான் நமக்குத் தெளிவு பிறக்கும். இம்மூன்றையும் அகற்ற வல்லவர் சற்குருநாதர். அவருடைய திருவடிகளைக் காண உருக்க முடன் நாடவேண்டும். மிக உயர்ந்த உருக்கமுடன் நாடினால் காணமுடியும். கண்டால் தெளிவு உண்டாகும்.

திருக்கச்சி நம்பியார் வரதராஜப் பெருமாளோடு நேரில் உரையாடும் பேறு பெற்றபோதும், குரு இன்றி முத்தி அடைய முடியாதவராகி, பின்னர் குருமூலம் முத்தி அடைந்தார் என்பது வரலாறு. எனவே எந்த ஓர் உயிரும் குரு அருளின்றி முத்திப்பேறு பெற முடியாது.

குருவை எவ்வாறு அடைவது என்று வழி கூறுகிறார் சுவாமிகள். நம் வாழ்வில் ஏதேனும் இடர் ஏற்பட்டால் குருநாதரிடம் சென்று அவ்விடரை நீக்கிக் கொள்ளுகிறோம். துன்பம் வரும்போது மனம் நைந்து உருகி நாடுகின்றோம். அந்த நைவும் நாட்டமும் எப்போதும் வேண்டும்.

காணவேண்டும் என்ற எண்ணம் முதலில் வேண்டும். இன்னும் காணவில்லையே, எப்போது வருவாரோ என்று ஏங்க வேண்டும். ஏங்கி வருந்தும்போது உள்ளம் உருகும். இந்த உருக்கமே குருவைக் காண வழி வகுக்கும். 'நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத், தஞ்சத்தருள் சண்முகன்' என்று அருணகிரிநாதர் குறிப்பிடுகின்றார். இவ்வுருக்கம் எவ்வாறு வரும்? சத்சங்கத்தாலும். அடியார்களுக்குச் செய்யும் தொண்டாலும் நல்ல நூல்களைப் படிப்பதாலும் உருக்கம் உண்டாகும். இதன் காரணமாகவே அடியார் கூட்டம் வேண்டுமென்று ஞானிகள் அனைவரும் கூறுகின்றனர்.

இவ்வாறு காண்பதற்கு உருகுங்கால் நாட்டம் உண்டாகும், குருவின் திருவடிகளைத் தவிர, வேறு நாட்டம் இல்லாத நிலையே உயர்நிலை. பித்தம் பிடித்த நிலையில், அவரை எப்போது காண்போம்? அவர் அருள் மணத்தை எப்போது நுகர்வோம்? நம் தாகம் எப்போது தீரும்? என்ற ஏக்கத்துடன் உருகிவாடும் நாட்டமே உயர் நாட்டம்.

இதற்கும் இறையருள் துணைபுரிய வேண்டும். நாமே முயன்று எதையும் அடைய முடியாது. நான் எனும் அகங்காரம் அடியோடு தொலைந்து, எண்ணம் சொல் செயல்

ஆகிய யாவும் அவன் வசமாக இருக்கின்ற உயர்நிலை கூட வேண்டும். இந்நிலை அடைவதற்குத்தான் சாதகன் எத்துணையோ சாதனம் செய்கிறான்.

ஓடுகின்ற மனத்தை நிறுத்தி, இறையருள் பெற, அவனைக்காண உருகி, நாடிவாடும் நிலை கைகூட வேண்டும். இந்நிலை அடைந்து, ஆன்மா பக்குவமுறும் போது இறைவனே குருவாக எழுந்தருளுகின்றான், என்பது ஆன்றோர் துணிபு.

'குரு' என்ற சொல்லுக்கு 'அஞ்ஞானமாகிய இருளை நீக்குபவன்' என்பது பொருள். அஞ்ஞானம் நீங்கியபோது ஞானம் பிரகாசிக்கிறது. என்றும் உள்ள மெய்ப்பொருளாகிய இறைவனே குருவாக வருவதால் 'சத்குரு' என்று போற்றப் பெறுகிறார். அழியாத மெய்ப்பொருளாகிய இறைவனை அடையும் மார்க்கத்தை உணர்த்தி, அரும் பெருந் துணையாய் இருந்து குறிக்கோளை அடையச்செய்வதால், அவர் சத்குரு நாதர் ஆகிறார்.

அவர் அருளே வடிவாக விளங்குகிறார். அவருடைய திருவடிகள் பரஞானம், அபர ஞானம் ஆகிய இரண்டையும் அருளவல்லன. அதாவது அருளியல் அறிவையும், உலகியல் அறிவையும் அருளவல்லன ஆகும்.

உலகில் வாழ்வாங்கு வாழ—அதாவது குறிக்கோளாகிய பேரின்ப வீட்டை அடைவதற்குரிய அன்பு வழியைக் கைக்கொண்டு, அருள் வாழ்வு வாழ்வதற்கேற்ற அறிவைப் பெறுதல் அபர ஞானமாகும்.

பிறப்பிறப்பைக் கடந்து இறைவன் திருவடியை அடைதற்குரிய அருளியல் அறிவை உணர்த்துவது பரஞானம் ஆகும். இவ்விரண்டின் மயமாக விளங்குவன சற்குருநாதரின் திருவடிகளாகும்.

இவ்விருவகை ஞானமும் எய்தும்போது, சந்தேகங்கள் நீங்கிவிடுகின்றன. மிக மேலான தெளிவு உண்டாகிறது. தூய தெளிவு தோன்றிவிட்டால் பிறகு சந்தேகங்களுக்கிடமேயில்லை. நிச்சயமாக ஆன்மா பேரின்ப முத்தியை எய்திவிடும்.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவுருச் சிந்திப்ப தாமே"

என்னும் திருமூல நாயனுர் திருவாக்கு இவ்வுண்மையை மிகத் தெளிவாக விளக்குகின்றது.

**13. குருவைக் கண்(டு) அடிபணிந் தேத்துவாய்; இரு வினைபற்று(து) உனைவிட்டுப் போகும்; ஏகசற் குணம்முற்றி உனைநற்றி யேவிடா(து) அருள் கனிவாகும்**

இறை நாட்டமுடைய உயிரைப் பக்குவம் செய்விக்க வேண்டி கடவுள் குருமூர்த்தியாக எழுந்தருள்கிருர். குரு புறத்தே மானுட வடிவிலும், அகத்தே காரண குரு வடிவிலும் தோன்றுகின்றுர். புறத்தே குரு தோன்றுவது முதற்படி. அகத்தே குரு தோன்றுவது இரண்டாம்படி.

புறத்தே குருவைக் கண்டவுடன், 'பரம்பொருளே நம்மை ஆட்கொண்டு அருள் புரியக் குரு உருவில் எழுந்தருளி யுள்ளார்.' என்ற பூர்ண நம்பிக்கையுடன் அவர் திருவடி மலர்களிற் பணிந்து வணங்கித் தொழுது உருகிப் போற்ற வேண்டும். அவர் அருளும் உபதேசப்படி அருள் வாழ்வாற்ற வேண்டும். அருள்நிட்டை பழக வேண்டும். அவ்வாறு பழகப்பழக, குருபெருமானின் திருவருளால் பொறி புலன்கள் அசைவற்று உள்ளே ஒடுங்கும் தவநிலை வாய்க்கும். அந்நிலையில் பழகி முன்னேறும்போது, உள்ளே காரண குருவின் தரிசனம் கிடைக்கும். அப்போது வினைகளினின்றும் விடுபடக்கூடிய உயர்நிலை வாய்க்கும்.

நமக்கு வாய்த்துள்ள மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களின் அசைவினுல், எண்ணம் சொல் செயல் இவை தோன்றுகின்றன. இவை நல்லவையாயின் புண்ணிய மும், தீயவையாயின் பாவமும் உண்டாகின்றன. இவை எத்தனையோ பிறவிகளாகச் சேர்ந்து குவிந்து கிடக்கின்றன. இவை 'சஞ்சிதம்' எனப்படும்.

இவற்றுள் ஒரு சிறு பகுதியைத் தந்து அனுபவித்து வரும்படி இவ்வுடம்பைக் கொடுத்து இறைவன் நம்மை அனுப்பியுள்ளான். இப்பிறவியில் அதனை அனுபவித்தாக வேண்டும். இது 'பிராரப்தம்' எனப்படும்.

இப்பிறவியில் நாம் புரியும் புதியவினை, ஆகாமியம் எனப்படும். இதுவும் சஞ்சிதத்துடன் சேர்ந்து குவிந்து, பிறவிபபிணியை வளர்த்துக்கொண்டே போகும். இவ்வாறு வினை வளர்ந்துகொண்டே போனால், நாம் என்றுமே பேரின்ப முத்தியைப் பெற இயலாமற் போய்விடும்.

ஆதலால் கருணை மயமான குருநாதர் நம் வினை வளர்ச்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார். நம்மை பேரின்ப முத்திக்கு ஆளாக்குகிறார். அந்த ரகசியத்தை பெரியோர்கள் உணர்த்தி யுள்ளார்கள் நம் குருபெருமானும் மிக அழகாக உணர்த்தி யிருக்கிறார் எப்படியெனக் காண்போம்.

மலைபோல் குவிந்து கிடக்கும் 'சஞ்சிதம்' என்னும் முன் வினைத் திரளைக் குருநாதர் தம் மெய்ஞ்ஞானக் கனலால் எரித்து சாம்பலாக்கி விடுகிறார்

இப்பிறவியில் புதிதாகச் சேரும் ஆகாமியம் என்னும் புதியவினை நம்மைச் சேரவொட்டாமல் தடுத்து விடுகிறார். அடியவர்களின் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தமக்கு அர்ப்பணமாக ஏற்றுக்கொண்டு அருள்வாழ்வு வாழச் செய்து தவத்தை வளர்த்து தவக்கனல் ஓங்கச் செய்கிறார். அப்போது அடியவர்களின் எண்ணம் உரை செயல் அனைத்திலும் 'தான்' எனும் முனைப்பு அடியோடு நீங்கி விடுவதால் அவர்கள் செயல்கள் யாவும் ஜீவச் செயல்கள் ஆகாமல் சிவச் செயல்களாகின்றன.

அதனால் அவர்கள் அறிந்தோ அறியாமலோ செய்யும் செயல்களினால் ஏற்படும் புண்ணிய பாவங்கள் அவர்களை நெருங்க வொட்டாமல் அவர்களின் தவக்கனல் தடுத்து விடுகிறது.

அவ்வாறு அவர்களை நெருங்க இயலாமல் விலகி நிற்கும் புண்ணிய பாவங்கள், அவர்களைப் பற்றிப் புகழ்ந்து பேசுவோரையும், இகழ்ந்து கூறுவோரையும் முறையே சென்று சேர்ந்து பயன் அளிக்கின்றன.

குருநாதர் திருவருளுக்கு ஆட்பட்ட அடியவர்கள் இவ்வாறு 'சஞ்சிதம்' ஆகிய முன் வினையினின்றும், 'ஆகாமியம்' ஆகிய வருவினையினின்றும் விடுபடுகின்றனர். பிறப்பெடுத்து வந்த 'பிராரப்தம்' என்னும் வினையை மட்டும் அனுபவித்தே

யாக வேண்டும். அதற்கும் குருநாதர் திருவருள் துணையிருந்து, அவ்வினையின் வலுவைக் குறைத்து லேசாக்கித் தாமும் துணையிருந்து, சுலபமாக அனுபவித்து முடிக்கும்படி அருள் புரிகிறார். பேரின்ப முத்தியை எய்தச் செய்கிறார்.

சஞ்சிதக் கட்டையெல்லாம் தணலாய் எரித்துனது
குஞ்சித பாதத்தைக் கொடுப்பாய் பராபரமே
ஆகாமி யங்கள் அணுவளவும் தோன்றாமல்
யோகாமி சங்கள் தந்த உறவே பராபரமே
பிராரத்வ கன்மம் புசித்து முடிவானவுடன்
சிரோ ரத்னமே உனது சேவை பராபரமே

என்றுள்ள சுவாமிகளின் அருள்வாக்கு இவ்வுண்மையை நமக்குத் தெளிவுற விளக்குவதைக் காணலாம்.

இவ்வாறாக இருவினை நீங்கி விடுவதால், பசுத்துவம் ஆகிய ஜீவத்தன்மை குறையும், ஏகப்பொருளாய், அழியா மெய்ப் பொருளாய் விளங்கும் இறைவனின் அருள் மயமான குணானுபவங்கள் வளர்ச்சியுறும்; நீங்காமல் ஒன்றி நிற்கும். அப்போது அருள் கனிவுற்று விளங்கும் என சுவாமிகள் விளக்கியருள்கிறார்.

## பொருள் ஒன்றை நாடு

14. ஐந்து பேர் வாழ்கின்ற வீடு—அதில்
அறிவான பொருள் ஒன்றை நாடு

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்கள் வாழ்ந்து வரும் வீடாகிய இந்த உடம்பு நமக்கு இறைவனால் கொடுக்கப் பெற்றுள்ளது. அதில் ஞான மயமான இறைவன் விளங்குகின்றான். அவனை உணர நம்மால் இயல்வதில்லை. அஞ்ஞானத்திற்குள்ளாகி, நம் உடம்பில் வாழ்ந்துவரும் ஐந்து பேரைத் திருப்தி செய்யவேண்டும் என்ற நோக்கத்துடன், அழியத்தக்க பொருள்களை நாடி உழல்கிறோம். அதனால் துன்பத்திற்குள்ளாகிறோம். இன்பமுற எண்ணும் நாம் அவ்வாறின்றி, ஞானமயமாக உள்ளே விளங்கும் உண்மைப் பொருளில் நாட்டம் கொள்ள வேண்டும் எனச் சுவாமிகள் உணர்த்துகின்றார்.

15. அந்தரத்தில் நடமிடும் தந்திமுகவன்—பதம்
சிந்தனை செய்வாய்—தொடர்
பந்தம் அறுமே—நாளும்
அனலில் மெழுகதுபோல் உருகிநிற்பாய்

'அந்தரம்' என்பது ஆகாயம்; ஞான ஆகாயத்தில் இறைவன் நடனமிடுகிறான் என்றனர் ஆன்றோர். 'தந்தி' என்ற சொல்லுக்குத் தந்தங்களையுடைய யானை என்பது பொருள். தந்திமுகவன் என்றால் யானை முகத்தைக் கொண்ட விநாயகக் கடவுளைக் குறிக்கும். பிரணவமயமான விநாயகப்பெருமான் ஞான ஆகாயத்தில் அருள் நடனமிடுகிறார். நர்த்தன விநாயகர் திருக்கோலத்தைப் பல திருத்தலங்களில் தரிசிக்கலாம்; அண்டத்தில் உள்ளது-பிண்டத்தில் என்பர் பெரியோர்

ஞான ஆகாயம் என்பது நம்முடைய உடம்பிலும் அமைந்துள்ளது. அதுதான் இதயத்தானம். அங்குஇறைவனின் திருநடனம் அல்லும் பகலும் ஓயாது நடைபெறுகிறது. அந் நடனம்தான் உயிர்களின் வாழ்விற்கு ஆதாரமாகத் திகழ்வது.

அப்பெருமானின் ஞானமயமான திருவடியைச் சிந்திக்க வேண்டியது உயிர்களின் தலையாய கடமையாகும். அவ்வாறு சிந்திக்கச் சிந்திக்க நம்மை வெகு காலமாகத் தொடர்ந்து பிணித்துள்ள பாசபந்தங்கள் அற்றுப்போகும், பாசபந்தங்களுடன் உள்ள தொடர்பு விலக விலக, நமக்கு இறைவன்பால் உள்ள தொடர்பு அதிகரிக்கும். ஞானக் கனல் மயமான இறைவனின் தொடர்பு கூடும் அளவிற்கு மனத்தில் உருக்கம் மிகும். நாள்தோறும் இறைவனின் திருவடியைச் சிந்தித்துச் சிந்தித்து அனலிலுற்ற மெழுகைப்போல உருக வேண்டும் என அண்ணலார் நமக்கு அறிவுறுத்துகிறார்.

நினைந்து, நினைந்து, உணர்ந்து உணர்ந்து,
நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பே
நிறைந்து நிறைந்து, ஊற்றெழும் கண்
ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து, அருளமுதே
நன்னிதியே, ஞான
நடத்தரசே. என்னுரிமை
நாயகனே என்று

வனைந்து வனைந் தேத்துதும் நாம்
வம்மின் உலகியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்!

என்னும் இராமலிங்க சுவாமிகள் திருவாக்கு இங்கு உன்னற் பாலது,

## உருகி நாடு

16. கனலில் மெழுகெனவும் உருகி மவுனநிலை
கண்டேகும்திடம் ஒன்றே அருள்நிலை—யெனநாடு

இறைவன் திருவருளில் தோய்ந்து, கனலிலுற்ற மெழுகென உருக உருக, பொறிபுலன் அனைத்தும் வெளிவியாபகங்களை நாடாது ஒடுங்கும். அப்போது மவுனநிலை வாய்க்கும் அந்நிலையில் திருவருள் துணையால் மேலும் முன்னேறிச் செல்வதற்குரிய திடம் உண்டாகும். அந்த திடம் உண்டாகி விட்டால் நிச்சயமாக மிக உயர்ந்த அருள்நிலை யெய்தி விடலாம் என்ற துணிவுடன் அருள்நிலையை நாட வேண்டும் என உணர்த்தியருள்கிறார் சுவாமிகள்.

இறைவன் நெருப்புமயமானவர். பெருநெருப்பில் விழும் எல்லாப்பொருளும் உருகி தன் நிலைமாறி நெருப்புமயமாவதை நாம் காண்கிறோம். பேரருட் பிழம்பான, கனல் வடிவாம். இறைவனின் அருகே செல்லும் உயிர்கள் தன் நிலை மாறி உருகிவிடும். இந்த உருக்கம் ஏற்படும்போது பேசா மௌன நிலை தானே எய்தும். இம்மவுனநிலையில் இறைவன் காட்சி தெளிவாகத் தோன்றும். அதைக்கண்டு மேலும் அவன் அளப்பரும் பெருமைகளையும் நம் சிறுமையையும் எண்ணி எண்ணி மேலும் உருகும்நிலை அடையும். இடையில் மாயையின் செயல் தோன்றினும், திடமாக அருள் நிலையை அடைய வேண்டும்; அருள் நெறியில் ஏக வேண்டும் என்பதுதான் குறிக்கோளாக இருக்க வேண்டும். இதையே 'நாடு' என்ற சொல்லால் குறிக்கின்றார் சுவாமிகள்.

முதலில் சுவாமிகளைக்காண உருக வேண்டும். மவுன நிலை பெறவேண்டும். இதற்குத்திடம் வேண்டும். அருள் நிலையில் நாட்டம் கொண்டு ஏகவேண்டும் என்பது தெளிவு.

## திருவடி தேடு

### 17. அருவுரு வாகிய திருவடி தேடிடு மனமே

இறைவன் திருவடி நித்யானந்த மயமானது. அதாவது என்றும் அழியாப் பேரின்பமாக விளங்குவது. அது நம் ஊனக் கண்ணுக்குத் தோன்றுவதில்லே. உருவமாகத் தோன்ருமல் அருவுமாக உள்ளது. ஞான நோக்கால் ஞானிகள் தரிசித்து இன்புறுகிருர்கள். சிறந்த பக்குவம் பெற்ற ஆன்மாக்களுக்கு இறைவன் உருவுடன் தோன்றி அருட் காட்சி தருகிருன்.

அருவமாகவும் உருவமாகவும் பொலியும் அந்தத் திருவடி தரிசனத்தை வானுலகத்து அமரர்களும், மாதவம் புரியும் முனிவர்களும் பெற இயலாமல் தவிக்கின்றனர். ஓங்கார வடிவமாகத் திகழும் ஆனேமுகப் பெருமானின் திருவடி கருணே வெள்ளம் பெருக்கக் கூடியது.

அத் திருவடியின் பேரருளால்தான் எல்லா உயிர்க்கும் இம்மையின்பமும் மறுமையின்பமும் சித்திக்கின்றது. அழியாது நிலேத்து நிற்கும் பேரின்ப மயமாக விளங்கும் அத் திருவடியை தவசிரேஷ்டர்களான ஸனகாதி முனிவர்கள் தழுவி இன்புறுகிருர்கள். தவமாற்ற இயலாது சஞ்சலமிக்க மனத்துடன் உழல்வோர் அத்திருவடியைப் பற்றி உய்ய இயலாமல் நழுவி விடுகிருர்கள். பொன்னெளி வீசும் ஞான சபையின் கண்ணே அருள் நடனமிடும் அத்திருவடியைத் தரிசித்தோர் பேரின்பப் பேறு பெறுகிருர்கள். கற்ப கோடி காலங்களாக உயர்தவம் புரிந்த முத்தான்மாக்கள் அத் திருவடியிற் சேர்ந்து முத்தி பெற்றுள்ளார்கள்.

அருவமாகவும் உருவமாகவும் விளங்கும் இறைவன் திருவடியைத் தரிசிக்க வேண்டும் என்னும் உயர் நாட்டம் நம்மிடம் உண்டாகி வளர்ச்சியுறுமாளுல், பஞ்சமாபாதகங்களிலிருந்து நாம் விடுதலே பெற அத்திருவடி அருள் புரியும். பரம யோகிகளுக்கும் மகா ஞானிகளுக்கும் உகந்த பணிவிடை செய்யும்படி நம்மை ஊக்கி உதவியருளும். அவ்வாறு உயர்ந்தோர் பணி புரிந்து பக்குவம் பெறுகையில், தாமரை மலர் போன்ற அத்திருவடி நம் கருத்தைத் தொட்டு அருள் நலம், புரியும். காணற்கரிதான அத்திருவடி நம் உள்ளத்திற் கலந்து

நம்மை ஈர்த்து அணைத்து அருள்புரியும். கற்கண்டோ, தேனோ சர்க்கரைப் பாகோ, செழுங்கனி ரசமோ, நறுஞ் சுவைப் பாலோ, என்றெல்லாம் எண்ணக் கூடிய வகையில் அருள் திருவமுதை அருத்தி ஆனந்தமாக்கும்.

ஆதலால் அத்திருவடியைத் தரிசிக்க வேண்டும் எனத் தம் மனத்திற்கு உணர்த்துவது போல நமக்கெல்லாம் உணர்த்தியருள்கிறார் குருபெருமான்.

அந்த உயர் நாட்டமுடன் நாமும் அருள்நெறி பேணி, தரிசனம் பெற்று, கருணையமு தருந்தி இன்புறுவோமாக.

## அழுதல், தொழுதல்

**18. மறைமொழி அனுபவம் பார்த்துத் தேங்கி**
**அழுது தொழுதிடில் கனிவாகும்.**

மறைமொழி—என்னும் சொல் 'மந்திரம்' என்றும், உபதேசம் என்றும் பொருள் தரும்.

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம்'

என்பது இலக்கணம். அருந்தவம் மிகுந்து மெய்ஞ்ஞானப் பொலிவுற்று, கருணை கனிந்து விளங்கும் மேலோர் அல்லது குருமார்கள் நிறைமொழி மாந்தர் எனப்பெறுவர். அவர்கள் சொற்படி அனைத்தும் நடக்கும். அவர்கள் ஆன்மாக்களின் பக்குவம் அறிந்து, அவர்களுக்குத்தக்க உபதேசம் அருளுவர்.

உள்ள உருக்கத்துடன் இடையறாது ஓதுவோரை உயர் நிலைக்கு உய்ப்பது மந்திரம் ஆகும். குருநாதர் உபதேசிக்கும் நெறியிற் பிறழாது நடப்போர் தீமைகள் நீங்கப்பெற்று மேல் நிலை அடைவர்.

அவ்வாறு மறைமொழி அருளும் உயர்நலத்தை உணர்ந்து, உணர்ந்து, அனுபவம் நிறையும் அளவிற்கு இறைவன்பால் அளவற்ற பேரன்பு உண்டாகும்; இறைவனின் மாபெருங்கருணையை உன்னி உன்னி அழுவதும், இறைவனின் அளவற்ற பெருமையை உன்னி உன்னித் தொழுவதும்

தோன்றும். அப்போது உள்ளம் கனிவுற்று உயர் இன்பம் அளிக்கும். இத்தகைய உயர் நிலையை அடைய முயல்வது அடியார்களின் கடமையாகும்.

தேங்கல்—நிறைதல்.

## சலன மற்றிரு

### 19 கருவி கரணுதிகள் சலன மிலாதிரு

பிறவியெடுத்துள்ள நமக்கு மெய், வாய், கண். மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளாகிய புறக்கருவிகளும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் உட்கருவிகளாகிய அந்தக் கரணங்களும் இறைவனுல் தரப்பெற்றுள்ளன. உட்கருவிகளின் அசைவுக்கேற்றபடி, புறக்கருவிகள் அசைவுறுகின்றன. அதனுல் வினைபெருகி பிறவியை வளர்க்கின்றது.

பிறவித்துன்பம் நீங்கி பேரின்பமாகிய முத்திப்பேற்றை அடைய வேண்டுமானுல், புறச்செயல்களை ஒடுக்கிக்கொண்டு அசையாது அமர்ந்து நிட்டையில் நிலைக்க வேண்டும்: மனத்தை இறைவன் திருவடியிற் பொருத்தி அருள் நிலையில் ஒன்ற வேண்டும். இந்த உயர்கருத்தை உணர்த்தவே, சுவாமிகள் 'கருவிகரணுதிகள் சலனமிலாதிரு' என்று அருளுகின்ருர். இவ்வகையில் பயிற்சி பெற்றுச் சிறக்கவும் குரு அருளின் துணை வேண்டும். ஆதலால் அவர் அருள் துணைபுரிய வேண்டும் எனப் பிரார்த்திப்போமாக! பயன் பெறுவோமாக!

## பற்றற்ற நிலை

### 20. எனக்கொன்றும் வேண்டாம் நின் பதமல்லாமல் வேறு

அழகான சிறு குழந்தை. அள்ளி அணைத்துக்கொள்ளும் கொள்ளை அழகு. அதன் தாய்க்குப் பெருமை. அக்குழந்தையை வைத்துக் கொண்டு வீட்டுக் காரியங்களைப் பார்க்க வேண்டும். வேறு யாரும் துணை இல்லை. நல்ல அழகான பொம்மைகளை எடுத்து குழந்தையின் முன்னே போட்டு விட்டுத் தாய் தன் காரியங்களைக் கவனிக்கிருள். சில மணி நேரம் சென்றது. குழந்தைக்குப் பசி. தாய் வேண்டும். கொஞ்சம் அழுதது. அந்தத் தாய் வருவதாக இல்லை.

இன்னும் வேகமாகஅழுதது. அப்போதும் வரவில்லை. மேலும் சில பொம்மைகளைக் கொடுத்தார்கள். ஆனால் குழந்தை அவற்றை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. பசி மிக அதிகமாயிற்று. கை காலை உதைத்துக் கொண்டு கோவெனக் கதறியது. இக்குரலை கேட்ட தாய் எல்லா வேலைகளையும் அப்படியே போட்டுவிட்டு ஓடி வந்து குழந்தையை வாரி எடுத்து அணைத்து உச்சி மோந்தாள். பால் அருத்தினள். அழுகை அடங்கியது.

ஆன்மாக்களாகிய குழந்தைகளுக்கு உலகமாகிய பொம்மைப் பொருள்களைக் கொடுத்துவிட்டு வேடிக்கை பார்க்கிறான் பரமனாகிய தாய். ஒரு சிலருக்குப் பணமும், பதவியும் அழகும், அறிவும் கொடுத்து அவைகளை மதித்து விளையாடுவதைக் காண்கிறான். ஆனால் ஆன்மப் பசி மிகுந்த ஒரு சில குழந்தைகள் இறைவனாகிய தாயின் ஞானப் பாலுக்காக ஏங்கி எனக்கொன்றும் வேண்டாம் நின் பதமல்லாமல் என்ற உறுதியோடு எந்தப் பொருளாலும் மயங்காமல் இருக்கின்றார்கள். அவர் தம் உறுதியைக் கண்ட இறைவன் ஓடி வந்து அமுத மூட்டி அருள்செய்கின்றான்.

இவ்வுலகம் மாயை, இதில் உள்ள பொருள்கள் யாவும் நிலையில்லாதவை. இவற்றுடன் மயங்கி நம் அன்புத் தாயாகிய இறைவனை மறந்து வாழ்கின்றோம். அலகிலா விளையாட்டுடை இறைவன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான்.

இவ்வுலகப் பொருள்கள் மீதுள்ள பற்றைத் துறந்து இறைவனை நாடிச் செல்லும் உயிர்களையும் தன்னிடம் வரவொட்டாமல் வேறு திசை திருப்பி விடுகிறான். இது ஏன்? குழந்தை தாயிடம் வருவதைத் தாய் தடை செய்யலாமா? பலருக்கும் இதில் ஐயம். எந்த ஒரு பொருளையும் தன் முயற்சியினால் வருந்திப் பெற்றால்தான் அதன் அருமை தெரியும். தந்தை ஈட்டிய பொருள்களைத் தனயன் வாரி இறைப்பான். ஆனால் அவன் ஈட்டியதாயின் கணக்குப் பார்த்துச் செலவு செய்வான். உலகப் பொருள்களுக்கே இவ்வாறு எனில், அழியாப் பெரு நிலையாகிய இறையருள் எனும் சொத்தை அதைக் காக்கும் தகுதி உடையவனுக்கே இறைவன் அளிக்கின்றான். காக்கும் தகுதி உள்ளதா என்று அறியவே பல சோதனைகள் தருகின்றான்; வெறுப்பு உண்டாக்குகின்றான்.

ஆனல் பிடிவாதம் கொண்ட குழந்தை தாய்க்காக அழுவதைப் போன்று இறைவனுக்காகவே அழுது தொழுது உருகி வாடும் ஞானியர்க்கு இறையருள் கை கூடும்.

சுவாமிகள் இக்கருத்தையே மற்ருேர் இடத்தில் பிடிவாதம் உற்றுப் பொருள் பெற்ற சித்தர் என்று அருள் செய்கிருர். இறைவனைத் தவிர வேறு ஒன்றும் வேண்டாத உயர்நிலையை வேண்டுவோமாக. அடைவோமாக.

21. பரமே உறவென்று துறந்திடில்
பவமானது வெந்து தணிந்திடும்
பகர் மாமறை சங்கை தெளிந்திடும்.

வேகமாகச் செல்கின்றது புகைவண்டி அதில் அமர்ந்து செல்லும் குழந்தை ஜன்னல் அருகே அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டே வருகிறது திடீரென்று, 'அப்பா' அப்பா இந்த மரங்களெல்லாம் ஓடுகின்றன" என்று கூவுகிறது. உண்மையில் ஓடுவது வண்டியே அன்றி மரங்கள் அன்று. அது போன்றே நிலையாமை நிறைந்த இந்த உலகை நிலைஎன்று எண்ணி, நிலையாக உள்ள இறைவனை நினையாமல் காலங்கழிக்கின்ருேம். பல மகான்கள் இவ்வுலக நிலையாமையை நன்கு உணர்ந்து இதில் பற்று வைக்காமல் வாழ்ந்தார்கள். அவர்கள் நமக்கு உணர்த்தியருளிய பாடல்களில் தம் அனுபவத்தை அள்ளித் தந்திருக்கிருர்கள்.

பிறவிக்குக் காரணமாய் அமைவது வினைகளே. இவ் வினைகள் இன்றேல் பிறப்பு இல்லை "வினையினுல் சனிக்கு மித்தேகம் நீ வீண்காலம் போக்குவது மோகம்" என்று சுவாமிகள் மற்ருேர் இடத்தில் அருள்கிருர்கள். பிறவியை அடியோடு களைய வேண்டும் என்று எண்ணுகின்றவர்கள் வினைகளை ஒழிக்க வேண்டும். நமக்கு வினைகளைச் சேர்க்கத்தான் தெரியுமே தவிர ஒழிக்கத் தெரியாது.

'பவம் என்ருல் பிறப்பு' வினையே பிறப்பு உண்டாவதற்கு விதையாகின்றது. விதையை நன்ருக வேக வைத்து விட்டால் பின்னர் முளைக்காது. அதன் வீரியம் தணிந்துவிடும் எப்படி வேக வைப்பது?

இவ்வுலகம் அதாவது இகம் நிலையானதல்ல. பரமே உறவு. அதுவே நமது சொந்த வீடு என்று முழுக்க முழுக்க

எப்போது எண்ணுகின்றேமோ அன்றே நம் பவம் வெந்து தணிந்திடும் என்று அருள்கிறார் குருநாதர். பரமே உறவென்று திடமான உறுதி கொண்டு, இவ்வுலகில் எது நடந்தாலும் இறை செயல் என்று எண்ணி, பற்றற்ற வாழ்க்கை வாழ்ந் தோமானால் வினைகள் வெந்து தணிந்திடும். வெகு சுலபமாகச் சொல்லலாம். ஆனால் கடைப் பிடிக்க வேண்டுமே. எதைச் செய்தாலும், நான் நான் என்ற எண்ணம் மேலோங்கி நிற்கும் நமக்கு இவ்வுலகப்பற்று நீங்க 'இறைவன் தான் கதி' என்ற எண்ணம் மேலோங்க வேண்டும்.

இதற்கு என்ன வழி. நம் முன்னோர் வாழ்க்கை நெறிகளை நமக்கு வழிகாட்டிய ஞானிகளின் வரலாற்றை உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டும்.

அவ்வாறு நமக்கு வழிகாட்டும் மறைகளை நாம் கற்கும் போது இவ்வுலக வாழ்விற்கு முரணானவை போன்றும், சில கருத்துக்கள் தோன்றும். இவ்வுலக நெறிப்படி அது குற்றம். ஆனால் பரமே உறவென்று நினைப்பவர்களுக்கு அதுசரியெனத் தோன்றும். முத்தியடைவதற் கேற்ற அதிதீவிர பக்குவர் களுக்குச் சொல்லப்படுகின்ற மாமறையில் உள்ள ஐயங்களும் அப்போது அகன்றுவிடும் என்று அருள்கிறார் குருநாதர்.

நம் வினைகள் வெந்து செயலற்று ஒழியவும், மறை களுக்கு விளக்கம் தோன்றவும் பரமே உறவென்று நாம் துறந்து வாழ வேண்டும் என்பதாகும். துறந்திடில் என்ற சொல்லுக்குக் காவி அணிந்து காட்டில் வாழ வேண்டும் என்பது பொருளல்ல. உள்ளத்துறவே மேலானது. அவன் இல்லறத்தானாகவும் இருக்கலாம் துறவறத்தானாகவும் இருக் கலாம். உள்ளத்தில் பற்றற்ற தன்மை அமைய வேண்டியது அவசியம். பற்றை விடுவோம்; பரத்தை நாடுவோம்.

22. பேயுலக மீதுறவை நீவிடுவையேல் உயர்வு பெற்றிடுவை
மெய்ப்பொருள் அருட்கனி பழுத்தொழுகும்—
விரைவாக

அனைத்து உயிர்களையும் ஆட்டுவிப்பது மனம். 'மனம் என்னும் பேய்க்குரங்கு' என்கின்றார் வள்ளல் பெருமான். இம்மனமே அகக்கரணங்களையும் புறக்கரணங்களையும் ஆட்டுவிக்கின்றது. இம்மனம் ஏதேனும் ஒன்றைப் பற்றிக்

கொண்டே நிற்கும். பற்றின்றி இருக்க மனத்தால் இயலாது. பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு'' என்பது வள்ளுவர் வாய்மொழி.

இம்மனம் இவ்வுலகப்பற்றில் உழலும்போது மாயையில் வீழ்ந்து மயங்கிக்கிடக்கும். நல்லது கெட்டது அறியாது. நிலையானது நிலையற்றது தெரியாது. இவ்வாறு மயங்கிக் கிடக்கும் மனம் தெளிவு பெற வேண்டும் உயர்வு பெற வேண்டும், மாயையை விட்டு விலகவேண்டும்.

இதற்கு ஓர் ஒப்பற்ற வழி கூறுகின்ருர் குருநாதர். இவ்வுலகம் பேயுலகம். நீ உயர்வு பெற்ருல் அதைக்கண்டு அழுக்காறு கொள்ளும். உன்னைக் கீழே இழுத்துத்தள்ளப் பார்க்கும் இது நிலையானதல்ல நீ எத்தனை நாள் எவ்வளவு தான் உண்மையாக உழைத்தாலும் நீ நிலை என்றும் சுற்றமென்றும் எண்ணிக் கொண்டிருப்பவர்கள் உன்னையொன்றும் புகழவோ, உயர்த்தவோ முடியாது. அவர்களால் உனக்கு முத்தி கொடுக்க முடியாது.

இவ்வுலகத் துன்பத்தில் உழன்று திரிகின்ற நீ உயர்வு பெறவேண்டுமா? ஒருவழி கூறுகின்றேன் கேள். பேயுலகமீது உறவை நீ விடு என்று அருள்கிருர். இங்கு நமக்கு ஓர் ஐயம். இந்தச்சாமி என்ன உலகவாழ்வைத் துறந்து சன்னியாசம் வாங்கிக்கொள்ளச் சொல்கிருரே. என்று எண்ணலாம். இல்லறத்தார்களுக்கும் முத்தி கிடைக்கும் வழி கூற வந்த வள்ளல் பெருமானே அவ்வாறு கூறுவார்? இங்கு ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். நீ உன் கடமையைச்செய். ஆனல் பயனில் விருப்பம் வைக்காதே'' என்பது கீதை. நாம் இவ்வுடம்பைப் பெற்று, நுகர்வதற்காகக் கொண்டு வந்த வினைக்குத் தொடர்புடையாரோடு வாழ்ந்தே ஆக வேண்டும். அவ்வாறு வாழ்க்கையில் வரும் நன்மை தீமைகளை விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக்கொள்ள வேண்டும். எதிலும் பற்றுக்கொள்ளக்கூடாது ''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்'' என்ற பொய்யா மொழிக்கிணங்க பற்றின்றி வாழ்ந்தோமானல் அவற்ருல் வரும் இன்ப துன்பம் நம் வாழ்வைப் பாதிக்காது.

இல்லறமோ துறவறமோ யாதாயினும் உள்ளத் துறவுடையோர்ராய் வாழ்வதே சாலச்சிறந்தது. அத்தகைய உள்ளத்துறவையே சுவாமிகள் இங்கு குறிக்கின்ருர்கள்.

இவ்வாறு பற்றற்ற நிலை அமையின் உயர்வு தானே கிட்டும். நிலையான, உண்மையான பொருளாகிய இறைவனின் திருவருள் நம்மில் பெருகும். அதுஉயர்ந்தகனி, ஒப்பற்றகனி அக்கனி பழுத்து இனிமையாக ஒழுகும். திருநாவுக்கரசர் பெருமானுர் "ஈசனெனுங்கனி" என்று குறிப்பிடுகின்ருர். அக் கனி நமக்குள்ளே இருக்கிறது. அது தான் அருளமிர்தநிலை என்று கூறுகிருர்கள். இந்த ஒப்பற்ற நிலை கைகூட வேண்டு மாயின் உள்ளத்துறவு வேண்டும் என்கிருர் சுவாமிகள்.

## மாதவர்க்கு தெரிசனம் தோன்றும்

23. பார்க்க மறைவு மிண்டு—ஏதங்கம்
  பார்த்திருக்க ஜோதியுண்டு
தீர்க்க முள்ள மாதவர்க்கு—தங்கம்
  தெரிசனங்கள் தோன்றுமடி

இந்த விஞ்ஞான உலகில் நாளும் பல விந்தைகளை காண்கிருேம், கேட்கிருேம், படிக்கிருேம். ஒரு சிலவற்றை நம் கண்ணுல் காண முடிகிறது. பலவற்றைக் காண முடிவ தில்லை. காரணம் என்ன? அவற்றைப் பார்க்கக் கூடிய கண்ணுடியை நாம் அணிந்திருக்கவில்லை. எப்படிப் பார்க்க வேண்டும் என்ற வழியையும் நாம் அறிந்திருக்கவில்லை, அதற் காக என் கண்ணுக்குத் தெரியவில்லை. ஆதலால் நான் ஒப்புக் கொள்ள முடியாது அவ்வுண்மைகளை என்று நாம் கூறினுல் பலரும் என்ன கூறுவார்கள். இவன் பைத்தியக்காரன் என்று நகைப்பார்கள்.

பஞ்ச பூதங்களாலான இவ்வுலக நிலையே இவ்வாறு எனில் இவ்வுலகைப் போன்று கோடானு கோடிக் கணக் கான அண்டங்களைப் படைத்து அவற்றை ஆட்டுவிக்கும் பரம்பொருளின் நிலை என்ன? அவன் எங்கும் நிறைந்துள் ளான். ஆனுல் யார் கண்ணுக்கும் புலப்படான். அணுவுக் கணுவாய் அப்பாலுக்கப்பாலாய் விளங்குகின்ற எம்பெரு மானைக் காண முடியாதோ? எப்படிக் காண்பது என்ற வினுக் களுக்கு அவனைக் கண்டறிந்த மெய்ஞ்ஞானிகள் வழி கூறு கின்ருர்கள்

"அவனை நீ இந்தக் கண் கொண்டு பார்க்க இயலாது. அவனைக் காண முடியாதபடி மறைவுகள் நமக்கும் அவனுக்

கும் இடையே உள்ளன. அம்மறைவுகளை அல்லது திரைகளைக் கடக்க வேண்டும். சுவாமிகள் இதை மிக அழகாக "தூல சூக்குமமெனுங் காடு வெட்டிப் பாதை தெளிவுறக் காட்டி, நால்வகைச் சேனையுங் கூட்டி பரி யானை ரதங்களும் ஓட்டி நட்ட நடுவான திரு பட்டணமும் சேரில் ஒரு ரத்ன மக மேருகிரி தோணும்" என்று கூறுகிறார். நம்மைச் சுற்றியுள்ள பாசப் பகையை அறுத்து இறைவனை அடையும் பாதையைச் செப்பனிட்டு கருவிகரணாதிகளாகிய சேனைகளை அழைத்துக் கொண்டு சென்றால் ரத்ன மகமேரு தோணும் இது சுவாமி கள் கருத்து.

மறைவுகளை உண்டாக்கி மறைவுகளுக்கு அப்பால் தான் இருந்துக் கொண்டு, உயிர்கள் தன்னைக் காண முடியாத படி மறைத்துக்கொண்டும் ஆனால் தான் மட்டும் அனைத்து உயிர்களின் செயல்களைக் கண்டு ஆட்டுவித்துக்கொண்டும் உள்ளான் இறைவன். இம்மறைவுகளைக் கடந்தால் ஜோதி வடிவமான இறைவன் தோன்றுவான் என்பது கருத்து. "பார்க்க மறைவுமுண்டு—ஏதங்கம் பார்த்திருக்கச் சோதி யுண்டு" என்ற வரிகள் இதனையே வற்புறுத்துகின்றன.

அஞ்ஞான இருளில் மூழ்கியிருக்கும் உயிர்களுக்கு மெய்ஞ்ஞான ஜோதியைக் காண ஆவல் உண்டாகிறது. எவ்வாறு காண்பது? யார் நமக்கு வழி காட்டுவார்கள். அச் சோதியைக் கண்டவர்கள் யாராவது உண்டா என்ற ஐயங் கள் எழுகின்றன, சுவாமிகள் தெளிவான விடை அருளு கிறார்கள். "தீர்க்கமுள்ள மாதவர்க்கு தெரிசனங்கள் தோன்றுமடி."

தீர்க்கம் என்பதற்கு உறுதி என்பது பொருள். இறைவனை அடைய இரண்டு தேவை ஒன்று பக்தி மற்றொன்று வைராக்யம். இந்த இரண்டும் இருந்தால் நிச்சயமாக இறைவனை அடையலாம் வைராக்யத்தோடு மாதவம் செய்த மெய்ஞ்ஞானிகளால் இறைவனைக் காணமுடியும் அவர்களுக்கு அவன் காட்சி தருவான். தன் அருள் விளையாடல்களைக் காட்டுவான் பல தரிசனங்கள் தோன்றும். இறைவனை ஒரு வகையில் கண்டால் தரிசனம் என்று கூறியிருப்பார். தரிசனங்கள் என்று பன்மையில் கூறியிருப்பதால் காட்சிகள் பல உண்டு என்பது பெறப்படுகிறது.

இக்காட்சிகள் அவரவர் நல்வினைக்கும் செய்தவத்துக்கும், உள்ளத்தின் உறுதிக்கும், உருகும் உருக்கத்துக்கும் ஏற்ற வாறு அமையும். ஒருவர் கண்ட காட்சியே மற்றவர் காண வேண்டும் என்பதில்லை. தன் விருப்பப்படி அவன் காட்சி தருவான். ஒரே வைரமணியை பலகோணங்களிலிருந்துகண்டால் பல விதமான காட்சிகள் தோன்றுகின்றன. அதுபோன்று தவநிலையில் படிப்படியாய் உயர்கின்ற போது அந்தந்தநிலைக் கேற்பக் காட்சிகள் தோன்றும். அளவற்ற அற்புதங்களைக் கண்டு கண்டு பேரானந்த முற்றவர்களாய், அக்காட்சியின் மாட்சியை முழுக்க எடுத்துக்கூற இயலாதவர்களாய், ஊமை கண்டகனவைப் போன்று தமக்குள்ளே வியந்தும்போற்றியும் இருப்பர்ஞானிகள் சிலசமயம் அவர்கள் உள்ளத்தே நிறைந்து பொங்கித் ததும்பி ஊற்றெடுத்துப் பாடல்களாகவும் உபதேசங்களாகவும் மனிதகுலத்தின் உய்வு குறித்து வெளிவருவதுண்டு.

காட்சிகள் பலவிதம், காண்பவரும் பலவிதம், இக் காட்சிகளின் பெருமைகளை அளவிட்டு அறிய வொண்ணுது. நாம் கண்டவரையில் மனதில் போற்றி பெருஞ்செல்வத்தைப் பாதுகாப்பதைப் போன்று நினைத்து நினைத்து மகிழவேண்டும் என்கின்றுர் சுவாமிகள் தீர்க்கமுள்ள மாதவர்க்கு தரிசனங்கள் தோன்றும். நீங்களும் தவம் செய்யுங்கள் தீர்க்கமுடன் தவம் செய்யுங்கள். அப்பொருளை உடனே காண முடியாது. மறைவுகள் பல உண்டு. அம்மறைவுகளை உம் தவவலிமையால் நீக்கி உள்ளே இருக்கும் ஜோதியைக் காணுங்கள் இதுவே உயர்நிலை என்று அருளுகிறுர் சுவாமிகள்.

தலைவி தோழிக்கு உரைப்பது போல் இவ்வுபதேசம் அமைந்துள்ளது. தலைவன் பரிபூர்ணர். தலைவி குருநாதர். ஞான மார்க்கத்தில் உயர்ந்து செல்வோர் நாயக - நாயகி உறவில் இறைவனை நாடுவர். மனமே தோழி. மனம் எப்பிறப்பிலும் விட்டகலாமல் உடன் தொடர்வதாகும் 'எப்பிறப்பும் விட்டகலா என் நெஞ்சே' என்பது இராமலிங்க சுவாமிகள் அருட்பா,

அம்மனத்தின் துணைகொண்டுதான் மேல்நிலைக்குச் செல்ல வேண்டும். அது முரண்பாடாகி விட்டால் செயலே நடவாமற் போய்விடும். அதனை தட்டிக் கொடுத்து உடன்

அழைத்தேக வேண்டும். அதில் உள்ள தீமையை அகற்றி தூய்மையாக்கிக் கொண்டு அழைத்தேக வேண்டும். செம்பு போன்ற மனத்தில் உள்ள ஆசையாகிய களிம்பை படிப்படி யாக நீக்க வேண்டும். உயர் நாட்டமுடைய மனம் மாசற்ற தங்கம் போன்றது. அதனுல் தம் மனமாகிய தோழியைச் சுவாமிகள் ஆகிய தலைவி தங்கம் என விளித்துக் கூறுவதாகக் கொள்ள வேண்டும்

24. அற்புதக் காட்சி யல்லோ—ஏ தங்கம்
அவருடைய தரிசனங்கள்
சொற் பெரிய மாதவர்க்கு—தங்கம்
சுயரூபம் தோன்றுமடி

இறைவனுடைய அற்புத லீலாவிநோதங்கள் அளவற்றவை. அருள் விளையாடல்கள் அளவற்றவை. நம் கண்ணுல் காண இயலாத பல காட்சிகள் மாறி மாறித் தோன்றும். எடுத்துக்காட்டாக ஒன்று. பரந்து விரிந்த விண். காலைக் கதிரவன் தோன்றும் நேரம். விநாடிக்கு விநாடி எத்தனை கோலங்கள். எத்தனை வண்ணங்கள். அழகு ஓவியங்கள். ஒருமுறை கண்ட காட்சி மறுமுறை இல்லை. மாறி மாறித் தோன்றுகின்றன, இது போன்றே மாலையில் வெய்யோன் மறையும் காட்சி செம்பொன்நிறமான அந்த இயற்கை ஓவியத்தின் வண்ணக்காட்சிகள் மிக அற்புத மாக விளங்குகின்றன. முழுமதி நாளில் விண்ணில் கோடிக் கணக்கான விண்மீன் புடைசூழ நிறைமதி பவனி வரும் அற்புதக் காட்சி. இப்படி எத்தனை எத்தனையோ அழகு ஓவியங்கள். இத்தனையும் இறைவனின் அளப்பரும் அற்புதக் காட்சிகளில் ஒரு துளி. ஒரு துளியே இவ்வாறு இருந்தால் அப்பேரருட் காட்சி எவ்வாறு இருக்கும் என அளவிட்டுரைக்க ஒண்ணுமோ?

இறைவனுடைய தரிசனங்கள், அவன் நமக்குக் காட்டும் காட்சிகள் அற்புதமானவை, அளவற்றவை, காண இயலா தவை, மாதவர்களால் மட்டுமே காணக்கூடியவை.

தவம் என்ன? என்பதும் தவத்தின் உயர்வு என்ன என்பதும் உயர்ந்த சான்றோர் கூற்றுகளால் ஓரளவு அறிகிறோம் திருக்குறளில் தவம் என்ற தலைப்பில் மிக அழகாக விவரித்து

உள்ளார் வள்ளுவர். தவத்தின் சிறப்பை வாய் விட்டுக்கூற இயலாது. இதனையே சுவாமிகள் 'சொற் பெரிய மாதவர்கள்' என்று குறிப்பிடுகின்றார். சொல்லால் அளப்பரும் பெருமை யுடையது தவசிகளின் மாட்சி. தம் உள்ளத்திரையில் இறைவனின் அழகு உருவத்தை தாம் கண்ட அளவு எழுதி வைத்து அதனையே கண்டு மகிழும் பெருமை வாய்ந்த தவசி களுக்கு இறைவன் தன் சுயரூபத்தை ஓரளவு காட்டுவான். கண்ட அவர்கள் பேரின்பத்தில் திளைத்து மது உண்டவண்டென மயங்கிக் கிடப்பர். உலக நினைவே அவர்களுக்கு இருக்காது. உயிர்கள் செய்த நல்வினைப்பயனால் ஓரோர் சமயம் உலக உணர்வு வரப் பெற்றால் தாம் கண்ட அற்புதக்காட்சிகளை வடித்துக் கூறுவார்கள். எனினும் முழுதும் வடித்துக் கூற அவர்களால் முடியாது. "கண்டவர்கள் விண்டதில்லை, விண்டவர்கள் கண்டதில்லை" என்பது பழமொழி.

எனவே இறைவனின் அளவற்ற அற்புதக் காட்சிகளைக் காண முடியாது. சொல்லால் அளப்பரும் மாதவசிகளால் அவருடைய சுயரூபத்தைக் காண முடியும் என்பது பெறப் படுகின்றது.

25. எங்கும் நிறைந்த பரம்பொருளைக் காண
சங்கையும் உண்டோ இத் தாரணி தன்னிலே

வெளிநாட்டில் படிப்புக்காகச் சென்றிருக்கிறான். ஒரு மாணவன். அங்கு அவனுக்கு வேண்டிய எல்லா வசதி களையும் செய்து தந்திருக்கிறார் அவன் தந்தை. தங்க இடம், உண்ண உணவு, உடுக்க உடை, மற்றும் பல வேண்டத்தக்க பொருள்களை அவ்வப்போது மகன் வினவாமலேயே தருணம் அறிந்து உதவி வருகிறார். அம்மகன் தந்தையை அந் நாட்டில் நேரில் காண முடியவில்லை காணவும் இயலாது. அதற்காக தந்தையே இல்லை என்று கூற முடியுமா? முடியாது. இதே நிலைதான் ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு.

தன்னால் இவ்வுலகுக்கு அனுப்பப்பட்ட உயிர்கள் தான் விரும்பியபடி வினைப் பொதிகளைக் கழித்து அருள் வாணிபம் செய்வதற்கேற்ற கல்வியைப் பெற வேண்டிய வசதிகள் ஆன தனுகரண புவன போகங்கள் அனைத்தையும் இறைவன் அளித்துள்ளான். காற்று, வெப்பம், உலகம், உடல், பொறி,

புலன் ஆகிய அனைத்தும் அவனால் அருளப்பட்டவை. எந்தெந்த உயிர்களுக்கு எவ்வெப்போது எவ்வெவற்றைத் தர வேண்டும் என்பதறிந்து தருகின்றான். தோன்றாத் துணையாய் இருந்து பேணுகின்றான். இக் கருத்தையே ‘வேண்டத்தக்கது அறிவோய் நீ’ என்ற திருவாசகம் உணர்த்துகின்றது. இவ்வாறு கண்ணும் கருத்துமாய்ப் புரந்து வரும் தந்தையை நம்மால் காண முடியவில்லை. அவன் எங்கிருக்கிறான், எப்படி இருக்கிறான், அவன் விருப்பம் என்ன என்பன போன்ற பல கேள்விகள் நம் முள்ளே எழுகின்றன. இந்நிலையே சாதகனின் முதற்படி. இவ்வாறு விசாரமுற்றுத் தேடும் உயிர்களுக்கு அருள் வழி காட்டுவான் வேண்டி ஞானிகள் உபதேசங்கள் அருளியுள்ளனர்.

இறைவன் எங்கும் நிறைந்துள்ளான். அவன் இல்லாத இடமே எங்கும் இல்லை. பரிபூர்ணன், எல்லா உலகங்களையும், கோடானு கோடி அண்டங்களையும் அவற்றைத் தழுவிய பேரண்டங்களையும் தன் அருள் விளையாட்டால் இயக்கும் அவன் அணுவுக்கணுவாய் அப்பாலுக்கப்பாலாய் விளங்குகின்றான் எனக் கூறுகின்றனர்.

ஆ! அப்படியா? இவ்வளவு பெருமை வாய்ந்தவரா நம் தந்தை! அவரைக் காண இயலவில்லையே. காண முடியுமா? என்று ஏங்குகின்றது பக்குவம் பெற்ற ஆன்மா.

இப்போதும் அபயம் அளிக்கின்றனர் அப்பெருமகான்கள். அவன் அளப்பரும் பெருமை உடையவன்தான். ஆனால் அடியார்க்கு எளியவன். அன்புக்குக் கட்டுப்பட்டவன். பக்திவலையில் படுபவன். அடியார்கள் ஏவலுக்கு கீழ்படிந்தவன் அடியவர் இச்சையில் எவை எவை யுற்றன அவை தருவித்தருள் பெருமான். அவர்கள் என்ன எண்ணுகின்றார்களோ அதை நிறைவேற்றிவைப்பான் நீ பல அடியார்களின் சரித்திரங்களைப் படித்ததில்லையா? சுந்தரமூர்த்தி சுவாமிக்களுக்காக இரவில் தூது நடந்தார், பாணனுக்காக விறகு சுமந்தார். வந்திக்காக பிரம்படி பட்டார், இன்னும் இப்படி எத்தனை யெத்தனையோ சரிதங்கள் அவர் பெருமையை அவர் எளிவந்த பெருமையைப் பறைசாற்றுகின்றன. எனவே நீ கவலைப் படாதே. தளராதே, உறுதி குலையாதே. என்று மகான்கள் அருள் செய்கின்றார்கள்

ஒருமைப்பட்ட மனத்துடன், நினைந்து ஏங்கும் உள்ளத்துடன் கரைந்து கரைந்து உருகும் நிலை வந்தால், அவன்

காட்சியைக் காண்பதில் ஐயமேயில்லை; சங்கைப்படாதே, இவ்வுலகிலேயே நீ காணும் அளவுக்கு அவன் வருவான். அளப் பரும் இன்பம் தருவான் என்று உறுதி கூறுகிறார் சுவாமிகள்.

எங்கும் நிறைந்திருக்கும் பரிபூர்ணனான அவனைக் காண்பதில் ஐயம் வேண்டாம். நாம் இவ்வளவு குறை உடையவர்களாக இருக்கின்றோமே, நமக்கு அவன் காட்சி கிடைக்குமோ என்று ஏங்காதே. உன் குறைகளை மன்னித்து உன்னை ஏற்றருளுவார் என்ற பொருள் பட

எங்கும் நிறைந்த பரம்பொருளைக் காண சங்கையும்
உண்டோ இத்தாரணி தன்னிலே''

என்று அருள் செய்கிறார் சுவாமிகள்.

## சிந்தை தெளிந்து பார்த்தால்

**26. சிந்தை தெளிந்துமே பார்த்தா யானால்
தெரிசனங்கள் தோன்றுமடி**

ஒரு அழகான குளம். நீர் நிறைந்திருக்கிறது. முழுமதி நாள். அம்மதியின் குளிர்ந்த கிரணங்கள் நீரின்மீது படிந்து பொன்னிறமாக்குகின்றன. ஆனால் விலங்குகள், பறவைகள் முதலியன அந்நீரில் படிவதால் நீர் கலங்குகின்றது. நீரில் படிந்துள்ள கிரணங்களும் அலைவதுபோல் தோன்றுகின்றன. நீரில் முழுமதியின் உருவம் பூரணமாகத் தெரியவில்லை. காரணம் நீரின் அசைவு. அசைவு இல்லாத சலனமற்ற நீர் நிலைகளில் வானில் தோன்றும் முழுமதியின் பிம்பம் மிகத் தெளிவாகப் பிரதிபலிக்கும். இது அனைவரும் காணும் உண்மை.

இக்கருத்தை ஒத்த ஒன்று நம்முள் நிகழ்கிறது. சித்தம் என்கின்ற குளத்தில் எண்ணங்களாகிய சிறு சிறு கற்கள் விழுவதால் கலக்கம், அசைவு ஏற்படுகிறது. அதன் காரண மாக நம்முள்ளே ஒளிவீசிக் கொண்டிருக்கும் முழுச் சோதி வடிவத்தைப் பூரணமாக, தெளிவாகக் காணமுடிவதில்லை. மேலே துவாதசாந்தப் பெருவெளியில் திகழும் அப்பெருஞ் சோதியை சித்தமாகிய குளத்தில் முதலில் காணப் பழக வேண்டும். பின்னர் ஆறுதாரங்களில் ஏறி புருவத்தின்

மத்தியில் நின்று துவாதசாந்த வெளியை நோக்கினல் கோடி சூரிய ஒளியோடு கூடிய அப்பெருமானைக் காண நேரும்.

இக்கருத்துக்களை நமக்கு அறிவுறுத்தவே சிந்தை தெளிந்து நீ பார்த்தாயானல் அற்புத தரிசனங்கள் தோன்றும் என்று விளக்குகிறார்.

நாம் எவ்வாறு இறைவனின் அற்புதத் தரிசனத்தைக் காண முடியும். இது முடியாது, தவம் செய்தோருக்குத்தான் அது தெரியும். நம்மால் காட்டிற்குச் சென்று தவமாற்ற இயலுமா? இல்லை. நமக்கு யார் வழிகாட்டுவார்கள். யாரை நம்புவது. உண்மையான குரு யார். அப்படி உண்மையான குரு கிடைத்தாலும் அவர் நம்மை ஏற்பாரா? என்றெல்லாம் வழி தெரியாது திகைத்துத்தேங்கி ஏங்கி வாடும் உயிர்களுக்கு சல்லிக்காசு செலவில்லாத தூயவழி கூறுகிறார் குருநாதர்.

"சிந்தை தெளிந்து பார்த்தாயானல்
தெரிசனங்கள் தோன்றும்."

என்று அருளுகிறார்.

## பக்தரைக் காக்கவே அண்டமெல்லாம் படைத்துள்ளான்

**27.** பாராதி அண்டமெல்லாம்—ஏ குயிலே
பக்தரைக் காக்க வல்லோ?

ஒரு நாட்டை ஆளும் அரசன். அவன் சிற்றரசன். இந் நாட்டைப்போல பல நாடுகளை ஆளும் பேரரசன் முன் இவ் வரசன் சிறியவன். இப்பேரரசனும் தன்னைவிட உயர்ந்த மற்ருெரு பேரரசன் முன் சிறியவனே. இவ்வாறு மண்ணு ளும் அரசர் நிலை இருக்க அகில உலகையும் படைத்து ஆளும் ஆண்டவன் முன் அனைவரும் சிறியவர்களே. அவன் பேரரசன். எல்லா அரசர்களுக்கும், அதற்கும் மேற்பட்ட சக்திகளுக்கும் அரசன். அவன் ஆணைப்படி எல்லாம் ஆடுகின்றன. "ஆட்டு வித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்ற அருள்வாக்கைப் போல் அவன் ஆட்டுவிக்கிறான் நாம் ஆடுகின்றோம்.

அரசர்க்கரசனாய் விளங்கும் இறைவனின் அளப்பரும் பெருமையை உணர்ந்து நாம் வியக்கின்றோம். பல கோடி அண்டங்களை உண்டாக்கிக் காத்து அழித்து மறைத்து

மீண்டும் அருளி இவ்வாறு இடைவிடாமல் அலகிலா விளையாட்டு புரிகிறான். அண்டகோளங்கள் அளப்பரும் விண்வெளியில் உலா வருகின்றன. ஒன்றையொன்று சுற்றுகின்றன. ஆனால் முட்டிக் கொள்வதில்லை. என்ன அதிசயம். காலம் தவறாமல் அவை அவை தம் கடமையைச் செய்கின்றன. இவற்றையெல்லாம் நோக்கும்போது நமக்கு ஓர் ஐயம் தோன்றுகின்றது. என்ன அது? கொஞ்சம் பொருள் சேர்த்தால் இன்னும் கொஞ்சம் சேர்ப்போம் என்று எண்ணுகின்றோம். சகல அண்டங்களுக்கும் அதிபதியாய் இருக்கும் இறைவன் ஆசை உள்ளவனா? ஆசை அற்றவனா? இஃது என்ன கேள்வி. இறைவனுக்கு ஏது ஆசை அவன் நிராசையுள்ள இடத்திலே தான் தங்குவான். எப்பொருளையும் விரும்பான் என்கின்றனர் ஞானிகள் ஒருபுறம் ஆனால் நம் குருநாதர் கூறுகின்றார் வெறும் ஆசைப்பட்டவன் மட்டும் அல்ல இறைவன் பேராசைக்காரன். ஏன் அந்தப் பேராசை. அது என்ன பேராசை.

இங்கே எடுத்துக்கொண்டுள்ள அருட்பாடலின் அடிகளுக்கு மேலடி

பித்தம் பிடித்தவண்டி பேராசைப்பட்டவண்டி
பித்தம் பிடித்த கதை ஏ-குயிலே பேரின்பம்
காட்டவல்லோ
பேராசை ஏதுக்கடி பேரின்ப வள்ளலுக்குப்
பாராதி அண்டமெல்லாம் ஏகுயிலே பக்தரைக்
காக்கவல்லோ

இறைவன் பித்தம் பிடித்தவனும். பேராசைப் பட்டவனும். ஏன் பித்தம் பிடித்தது அவனுக்கு? என்ன பித்தம் அது? தன்னை நாடி வரும் உயிரினங்களைக் கரையேற்றி பிறவாப் பெருநிலை காட்டி பேரின்பம் ஊட்ட வேண்டும் என்ற பித்தம். தாயையே நினைக்காமல் விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தையைத் தாய் மறப்பாளோ? அது போன்றே நாம் உலக மாயையில் சிக்குண்டு துன்பத்தை இன்பமென எண்ணி அலைந்து அவதியுறுவதைக் கண்டு பாவம் நம் குழந்தைகள் உய்ய வேண்டுமே என்று பித்து பிடித்து அலைகிறான், "பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு" என்பது பழமொழியன்றோ?

பேரின்பம் காட்ட பித்துக் கொண்டவன் பேராசை ஏன் பட வேண்டும். இந்தப் பார் முதல் அளவற்ற அண்டங் களிலெல்லாம் கணக்கற்ற உயிர்கள் வாழ்கின்றன. உலகனைத் தும் அவனுல் படைக்கப்பட்டவையே. இத்தனையும் ஏன் படைத்தான்? இறைவன் படைப்பில் பயனற்றவை என்று கூறத்தக்கவை ஏதும் இல்லை. எல்லாம் காரண காரியங் களுக்காகவே படைக்கப்பட்டுள்ளன.

மிகப் பெரிய செல்வந்தர் வீடு. வெகு காலமாகக் குழந்தையின்றி அண்மையில் அழகான ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவ்வீட்டுத் தலைவனுக்கு மிக்க மகிழ்ச்சி. அக் குழந்தையைப் பார்த்துக்கொள்ள செவிலித்தாய், விளை யாட்டுக் காட்ட மற்ற குழந்தைகள், பால் கொடுக்க பசுக்கள், ஓடி விளையாட தோட்டம். இவ்வாறு பல பொருள் கள் தேவைப்படுகின்றன ஒரு குழந்தைக்கு.

இவ்வாறே இறைவனின் ஒப்பற்ற உயர் குழந்தை களாக அவன் அருளாணையை இந்த உலகில் நிலை நாட்டுபவர் களாக, அவன் பெருமையை உலகுக்குணர்த்துபவர்களாக உள்ளவர்கள் அடியார் பெருமக்கள். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் தூய உள்ளம் படைத்த அந்த நல்ல குழந்தைகளை காக்கவே இறைவன் பாராதி அண்டமெல்லாம் படைத்துள்ளான் என்ற உயரிய உண்மையை குருநாதர் நமக்கு உணர்த்துகின்ருர். 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்ற சங்க காலச் செய்யுளில் அவ்வாசிரியர்க்கு ஏற்படும் வியப்பு போன்றதே இவ்வியப்பும். இப்பரந்த உலகங்களை ஏன் இறைவன் படைத்துள்ளான் என்ற வினவிற்கு பக்தரை, அடியார்களை, ஆண்டவனின் நல்ல குழந்தைகளைக் காக்கவே இறைவன் படைத்துள்ளான் என்று விடை தருகிருர் குருநாதர்.

## பிரார்த்தனை

28. உருகி வாடியே பாலன்
இடைவிடாதுன் வீடேக
உலக பாசம் வேரோடு—களைவீரே.

வலிமையற்ற ஒருவன் தன் பகைவர்களோடு போராடு கிருன். தன்னுல் இயன்ற வரை போராடுகிருன். வெற்றி கிட்டவில்லை. பகைவர்கள் கொக்கரிக்கின்ருர்கள். இந்தப்

பகைவர்களை எவ்வாறு அடக்குவது என்று பல நாளாய் யோசிக்கிறான். இறுதியில் இந்தப் பகைவரை வெல்லக்கூடிய ஆற்றல் படைத்த ஒருவரைப் பற்றி சான்றோர் கூறக் கேட்டான். அழிக்க முடியாது என்று நான் எண்ணிக் கொண்டிருந்த என் பகைவர்களையும் அழிக்க முடியுமா? அப்படியானால் அவரிடம் போகின்றேன் என்று முயல்கிறான், வெற்றியும் காண்கிறான்.

தன்னால் ஒன்றும் செய்ய இயலாததான உயிர், தன் பகைவர்களாகிய ஐம்புலனோடு ஓயாது போராடி மிகவும் களைத்து விடுகின்றது. நம் பகைவரை வெல்லும் வழி யாது என ஆராய்கிறது. இதற்கு முன்னர் யாராவது இவ்வாறு பகைவரை வென்றுள்ளார்களா என்று உசாவுகிறது. எத்தனையோ பேர் இப்பகைவரை என்ன? இவற்றுக்கு மூல காரணமாயுள்ள மாயை எனும் பெரும் பகையையே வென்றுள்ளனர் என்று கூறுகின்றனர் ஆன்றோர். யார் அவர்கள்? மகான்கள், புலன்களை வென்றவர்கள். இறைவனோடு தொடர்பு கொண்டு இறைவனின் பெருந்துணையை அடைந்து அவனருளால் பகைவரை வென்றவர்கள்.

ஆஹா! வழி இருக்கிறது போலும், முயன்று பார்ப்போம் என்று உயர் முயற்சி செய்யும்போது இடையிடையே உலக பாசம் என்ற போர்வையில் புலன்கள் போராடுகின்றன. இறைவன் வேடிக்கை பார்த்துக்கொண்டு வாளா இருக்கிறான்.

மனத்தை அடக்கி இறைவன் தியானத்தில் அமர எண்ணுகின்றோம். ஆனால் எண்ணங்கள் பலப்பல தோன்றுகின்றன. காது வேறு ஓசைகளைக் கேட்கிறது. மூக்கு வேறு மணத்தை நுகர்கிறது என்ன செய்வது. சும்மா அமர்ந்திருக்கவும் மனம் இடங்கொடுக்கவில்லை. இவ்வாறு பாசத் தளையில் அகப்பட்ட உயிர் துன்புறுகிறது.

இப்பாசத்தை பெருமரமாக வேறோர் இடத்தில் சுவாமிகள் குறிப்பிடுகின்றார்கள். "ராகத்துவேஷங்கள் எட்டோடு பின்னி நன்றாய்ப் படர்ந்து வளர்ந்தேறி, என்றும், பாசம் படர்ந்து கொடிதளிர் பூ காய் பழுத்துச் சொரிந்தது பாவியர் மேல் என்றும், தூலசூக்குமமெனும் காடுவெட்டிப்

பாதை தெளிவுறக்காட்டி என்றும் பல இடங்களில் குறிப் பிட்டுள்ளார்கள்.

இந்த உலக பாசத்தை வேரோடு களைய வேண்டும். குமர குருபரர் மீனுக்ஷியம்மை பிள்ளைத் தமிழில் "அகந்தைக் கிழங்கை யகழ்ந்தெடுக்கும் தொழும்பர்" எனக் குறிப்பிடு கிருர்.

இறைவனை நாடிச் செல்ல எண்ணும் ஒவ்வோர் உயிரும் இந்தப் பாசத்தைக் களைந்தே ஆக வேண்டும். இறைவனை மனத்தெண்ண நினைக்கும் போதே இடையிடையே இப்பாசம் தோன்றி உண்மையைப் போல வேடம் போடும். சாதனங் களால் இப்பகையைத் தானே தடுக்கலாம் என்று எண்ணிய உயிர் மிகவும் பாடுபடுகின்றது. என் செய்வது! அதன் பாடுகள் விழலுக்கிறைத்த நீராகிவிட்டன. சற்றும் பய னில்லை, உடல் தளர்ந்து, உள்ளம் சோர்ந்து செய்வதறியாது நிற்கையில் எல்லாம் வல்ல பரம் பொருளைத் துதிப்போம் என்ற எண்ணம் உண்டாகின்றது. இதுவே உண்மையான பிரார்த்தனை நிலை முதலையால் பற்றப்பட்ட யானையின் ஓலமும், துரியோதனன் அவையில் தன்மானம் இழக்க நேர் கையில் பாஞ்சாலியின் ஓலமும், இத்தகையனவே,

தான் என்பது சற்றும் இன்றி "இறைவா நான் உன்னை அடைய எண்ணிப் பல நாளாய் வாடுகின்றேன். என் வாட்டமெல்லாம் நீ அறிவாய், நான் படும்பாடு அனைத்தும் உனக்குத் தெரியாதா. பட்டதெல்லாம் போதும், இனியும் பட முடியாது. என் கல்மனம் உன்னை நினைத்து உருக வேண் டும். உடம்பெல்லாங் கண்ணுய் அண்ணு வெள்ளம் தான் பாய வேண்டும். உன் திருநாமம் கேட்ட அளவில் நான் மெய்ம்மறக்க வேண்டும், சமாதி நிலை அடைய வேண்டும். உன்னைக் காணத் துடிக்க வேண்டும், இவ்வுருக்கமும், வாட்ட மும் இடைவிடாது இருக்க வேண்டும். இவையெல்லாம் எதற்கு? உனக்கு ஏதாவது இதில் பலனுண்டா? இல்லை; எனக்குத் தான் பயன். நான் இந்தப் பகைவர்களிடம் இருந்து தப்பி உன் மயமாக வேண்டும். தைலதாரை போல உன் எண்ணம் என்னுள் இனிக்க வேண்டும்.

இத்தனைக்கும் தடையாய் அமைந்த உலக பாசத்தை வேரோடு களைந்தெறியுங்கள் குருநாதா, உம்மையன்றி

வேறு யாராலும் இச்செயல் நடக்காது என் வேண்டு கோளை ஏற்று உடனே வாருங்கள். என் குற்றங்களைக் காண வேண்டாம். எத்தனையோ அஃறிணை உயிர்களுக்கெல்லாம் நீ நன்மை செய்திருக்கின்றாயே, இப்பாவியேனின் வேண்டு கோளை ஏற்று இரங்கி அருள்செய் இறைவா நான் ஒன்று மறியாப் பேதை, பாலகன். என் துன்பமறிந்து எனக்கு இரங்கி உலக பாசத்தைக் களைந்து, இடைவிடாது உருகி, இடைவிடாது வாடி, வீடு பேற்றை அடைய வழி செய்வாய் இறைவா என்ற இந்தப் பிரார்த்தனை நம் உள்ளத்தை உருக்குகிறதன்றோ?

இடைவிடாது உருகி வாடியே உமக்கே உரிமையான மோட்ச வீட்டுக்குள் யான் புக வேண்டும். அவ்வாறு செய்ய இயலாமல் உலக பாசம் தடுக்கிறது. அது வேரோடு களைந் தெறியப்பட வேண்டும். அதைச் செய்ய உம்மால்தான் இயலுமாதலால், உலக பாசத்தை வேரோடு களைந்தருள்வீர் எனக் கொண்டு கூட்ட வேண்டும்.

உன் பாலன் ஆகிய யான் உன் வீட்டுக்குள் ஏக அருள் புரிவாயாக என்னும் உரிமைக் குரல் நமக்கும் ஊக்கம் கொடுக்கிறது,

**29. ஜெனனம் அறும்படி தேவா நின்கழல் தருவீரே.**

இன்றைய விஞ்ஞான உலகில் புதுப்புது மருந்துகள் கண்டு பிடிக்கப்படுகின்றன. அவற்றிற்கு ஏற்ப புதுப்புது நோய்களும் உண்டாகின்றன. பெயர் தெரியாத பலநோய், அவற்றோடு போராடும் மக்கள், ஒரு நோயைப்போக்க முயன்று இன்னொரு நோய்க்கு ஆளாதல். இவ்வாறு நாளும் மருத்துவர்களும், மருத்துவ மனைகளும் பெருகிக்கொண்டே வருகின்றன.

ஆனால் இந்த மருத்துவர்களால் தீர்க்க முடியாத பல நோய்கள் தொன்று தொட்டே உள்ளன. அவை நம்மோடு வாழ்கின்றன. நாம் அந்நோய்க்கு ஆளாகி உள்ளோம் என்பதே அறியாமல் வாழ்ந்து வருகிறோம். ஆ! அப்படியா அது என்ன நோய் என்று அறிய அவாமிகுகின்றதன்றோ? அவை பசி நோய், பிறவிநோய்.

பசி நோய்க்கு மருந்து கொடுப்பவனை அதாவது உணவு அளிப்பவனை "பசிப்பிணி மருத்துவன்" என அழைத்தனர் நம் முன்னோர். வடலூர் வள்ளல்பெருமான் குடும்பகோரம் என்ற தலைப்பில் இதுபற்றி தெளிவாகக் கூறுகிறார். நான் குடியிருக்கும் வீடோ ஒன்பது தொளையுடையது. அவ்வீட்டில் என்னோடு ஐந்துபேர் குடும்பம் நடத்துகின்றனர். அவர்கள் செய்யும் அட்டகாசமோ சொல்ல முடியாது. இதுதான் போகின்ற தென்றால் என் ம னை வி க ளோ அடங்காப் பிடாரிகள். அவர்கள் பிள்ளைகளோ மிகமிக வம்பர்கள். இவர்களோடு குடும்பம் நடத்தும் நான் மிக அவதியுறும் வேளையில் என் வீட்டுக்காரனோ ஒரு நாளைக்கு மூன்று முறை வாடகை கேட்கிறான். நான் என்ன செய்வேன் என்று முறை இடுகின்றார். நம் உடலே வீடு. அதில் ஒன்பது தொளைகள் உள்ளன ஐப்புலன்களே உடன் உறையும் குடித்தனக்காரர். ஆணவம், மாயை, காமியம், எ ன் னு ம் மூவரே அடங்காப் பிடாரி மனைவிகள், அஞ்ஞானமும், மனம், புத்தி, சித்தம் அகங்காரம் எனும் உட்கரணங்களும், சாத்துவிகம், ராஜஸம் தாமஸம் எனும் முக்குணங்களும் வம்பு செய்யும் பிள்ளைகள். பசிக்கிடும் உணவே வீட்டுக்குத்தரும் வாடகை.

இப்படியாக பசி நோயால் வாடும் மக்கள் பலர். எல்லா அறங்களிலும் மேலான அ ற ம் பசிக்குஉணவிடுதலே என ஆன்றோர் கூறியுள்ளனர். இந்நோய் நம் உயிர் உடலைவிட்டுப் பிரியும் வரை இருக்கும்.

மற்ற பிறவி நோயோ நம்மோடு தொடர்ந்து என்றும் இருந்து வருவது. எ ப் போ து ஒரு உயிர் இவ்வுலகில் தோன்றியதோ அதுமுதல் உடன் உறைந்து இறப்பும், பிறப்பும் மாறி மாறிவரச் செய்யும். இப் பிறவிப் பிணியின் தன்மை வாய்விட்டுக் கூறமுடியாது.

இப்படி ஒரு நோய் நமக்கு உள்ளது என்று தெரியாமலேயே வாழ்பவர் பலர். இந்நோய் உள்ளது என அறிந்தோர் சிலர். அறிந்த அவர்கள் அ ந் நோ யி ன் கொடுமையையும் அதுதரும் வினைகளையும் அறிந்து துடித்தனர் இந்நோய்க்கு மருந்து உண்டோ என நாடினர் தேடினர்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் .....எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" என்பது திருவாசகம். காரைக்காலம்மையார் கைலையில் சிவபெருமானிடம் வேண்டும்போது பிறவாமை வேண்டும் என வேண்டுகின்றார். "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்பது திருக்குறள் இம்மனிதப் பிறவி நீங்கினால் இனி எப்பிறவி வருமோ அப் பிறவி கொண்டு இறைவனை அடைய முடியுமோ முடியாதோ என்று அஞ்சிய ஞானிகள் இப்பிறவியிலேயே இறவாப் பெரு நிலை அடைய முயன்றனர். வெற்றியும் கண்டனர்.

சங்கிலித் தொடர் போன்று மீண்டும் மீண்டும் இந்த உலகுக்கு வருவதும் தாய்வயிற்றில் கருவுறுவதும் பல துன்பத் திற்காளாகிப் பிறப்பதும் மாயையின் பிடியில் சிக்குவதும் ஆக எத்தனை காலம் கழிப்பது என்று வருந்தினர்.

இப்பிறவித் துன்பத்தைப் போக்க இறைவா உன் ஒருவனால்தான் முடியும். என் மீது கருணை வைத்து உன் திருவடித்தாமரைகளைத் தந்தருள். அவ்விடமே இறப்பு பிறப்பு என்ற நோய் அடைய முடியாத இடம் "போதும் போதும் ஐயே எடுத்த சென்மம்" என்றும் சென்மம் எடுக்க இனி முடியாது முடியாது" என்றும் கூறுகிறார் குருநாதர்.

இறைவா! இன்னும் நான் பிறப்பெடுக்க வேண்டுமா? இதுவரை எடுத்த பிறவிகள் போதாவா என் குறைகளை எத்தனை சென்மமாக அனுபவிப்பேன் என்னும் கருத்துப்பட "கோடானு கோடி சென்மம் நானே பிறந்திருந்தும் குறைகள் அனுபவிக்கவில்லையோ' என்று இறைவனை வினவுகின்றார். ஆம் இந்நோய் போக நாம் தேட வேண்டுவதும், நாட வேண்டுவதும் இறை கழலே. வேறு பொன் பொருள் அல்ல. இப்பிறவியில் நுகர்வதற்கென நாம் கொண்டு வந்தவை என்னவோ அவை நாம் தேடாமலேயே நம்மை வந்து சேரும். எனவே இவ்வுலக போகங்களுக்கலையாமல் பிறவிப் பிணி தீர இறைவன் திருவடித்தாமரைகளை அருளுமாறு வேண்டுவோமாக! அதுவே அந்நோய்க்கு மருந்து.

## பாசம் ஒழித்து விட்டால் பரமபதம் சேரலாம்

30. பாசமெனும் திரையால் மறைந்திடும்
ஆசையெனும் கடலே கடந்திடு
பாகமும் வந்திடுமோ எனும் திகில் அடையாதே

ஒரு மகான் உலகப் பற்றைத் துறந்தவர். அவர் தனது மாற்றுத் துணியை எலிகள் கடித்துவிடுகின்றன என்று எலிகளைப் பிடிக்க பூனை ஒன்று வளர்த்தார் அப்பூனைக்குப் பால் தர பசு ஒன்றை வாங்கினர். அப்பசுவைப் பார்த்துக் கொள்ள ஆள் ஒருவரைப் போட்டார். இறுதியில் அந்த ஆளின் குடும்பம் முழுவதையும் காக்க வேண்டிய பொறுப்பு வந்து சேர்ந்தது.

மகானுக்கே இக்கதியென்ருல் ஆசைக் கடலில் அழுந்தி, அழுந்தியிருக்கின்ருேம் என்ற நினைவுமின்றி பாசம் என்னும் திரையால் மறைக்கப்பட்டுக் கிடக்கும் உயிர்களின் கதி என்ன? அவர்களின் நிலையை உணர்ந்த ஞானிகள் இரக்கப்பட்டனர். வழி கூறினர்.

காலை எழுந்தவுடன் செய்தித்தாளை புரட்டுகின்ருர் ஒருவர். அதில் பல தரமான செய்திகள். ஒரு உந்து வண்டி மரத்தில் மோதியது. அந்த இடத்திலேயே மாண்டவர் பலர் என பெயர்கள் கொடுக்கப்பட்டிருந்தன. கையில் காபியை வைத்து அருந்தியவாறே அச்செய்தியைப் படிக்கின்ருர். இன்னொரு நாள் செய்தித்தாளில் அவர் மகனே விபத்தில் சிக்கிக் கொண்டதாகச் செய்தி வருகிறது. கண்ணுற்றதும் துடிக்கிருர், அழுகின்ருர் ஏன்? பாசம். இந்த பாசம் எப்படி உண்டாயிற்று? ஆசையால்.

இதையே குருநாதர் ஆசைக்கடலை பாசத்திரை மறைத்திருக்கிறது என்ருர். இந்தத் திரையைக் கிழித்தெறிந்து இறைவன் திருநாமம் என்கின்ற புணையேறி ஆசைக் கடலைக் கடக்க வேண்டும்.

ஆசை என்பதே எல்லாத் துன்பங்களுக்கும் மூல வேர். இதைக் கடப்பது அவ்வளவு எளிதல்ல. பாசத்திரை அவ்வளவு விரைவில் விலகாது. என் செய்வது? இத்திரை அகன்று கடல் கடந்தால் தான் முத்திக் கரை சேர முடியும்.

இதற்காக முயன்றவர் பலர். வெற்றி கண்டவர் சிலர். இடையில் அவர்கள் பட்ட துன்பங்கள் எண்ணிலடங்கா. புராணங்களும் இதிகாசங்களும் நமக்கு இதை அறிவுறுத்துகின்றன. எவ்வளவோ படிக்கின்றோம் ஆனால் ஆசை அகல்வதாக இல்லையே.

முதலில் உள்ளே இருக்கும் ஐம்புல ஆசையை அடக்கு என்கின்றனர். விரதம், ஜெபம், தவம், தியானம், நல்லோர் கூட்டுறவு முதலிய சாதனங்களால் நாக்கு முதலிய புலன்களின் ஆசைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன. பின்னர் புறத்தேயுள்ள பாசத்தையும் ஒழிக்க முயல வேண்டும். எப்படி ஒழியும்? தன்னலம் குறைந்து பொது நலம் ஓங்கி அன்பு அருளாகி விரிந்து பரந்து பாயும் போது இப்பாசம் அகன்றுவிடும். உலகமெல்லாம் நம்முடையது என்று வரும் போது இவ்வுலகை நாம் படைக்கவில்லை. படைத்தவன் இறைவன், அவன் ஆட்டுவிக்கின்றான். இந்த பந்தபாசங்கள் நிலையானவையல்ல. கானல்நீர் நிலையானது இறைவன் திருவடிகளே. அவற்றையே நாம் தியானிக்க வேண்டும் என்ற எண்ணம் பூர்வ புண்ணியப் பயனால், இறையருளால் தோன்றி வலுப் பெறுகிறது. ஆனால் பாசப் பகையோ இந்த நல்ல எண்ணத்தை வளர விடாமல் தடுக்கிறது.

ஒரு அம்மையார், கல்வி கேள்விகளில் சிறந்த ஞானமுடையவர். இல்லத்தரசி. கோயிலில் பெரிய புராணச் சொற்பொழிவு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அம்மையார் வேலைகளை முடித்துக் கொண்டு சொற்பொழிவைக் கேட்கக் கோயிலுக்குச் சென்றனர். இடையில் ஓர் எண்ணம்; பள்ளி சென்ற குழந்தை வந்தால் யாது செய்வாள். அவளைக் கவனிக்க ஒருவரும் இல்லையே என்ற பாசம் குறுக்கிடுகிறது. பாசத்துக்கும், இறை தொடர்புக்கும் இடையில் ஒரு போராட்டம். இறையுணர்வு வென்றால், வந்தால் வரட்டும். கடவுள் இருக்கின்றார் என்று இருப்பார்கள். பாசம் வென்றால் உடன் எழுந்து சென்றுவிடுவார்கள்.

சக்குபாய், மீரா, ராமதாஸ், பட்டினத்தார் போன்ற பெரு மக்கள் பாசத்தை அறுத்துவிட்டார்கள். திரை

அறுந்துவிட்டது. எது நடந்தாலும் இறைவன் செயலாக ஏற்றுக் கொண்டனர். மானுபிமானங்களைத் துறந்தனர். அது போன்ற மகான்களின் சரிதங்களை நாம் படித்தும் கேட்டும் நம் வாழ்வில் அனுட்டானத்திற்குக் கொண்டு வருவதன் வாயிலாக பாசத் திரையை அறுக்க முயல வேண்டும்.

பெரிய புராணத்தில் இளையான் குடிமாற நாயனார் இரவு நேரத்தில் மழைக் காலத்தில் வந்த விருந்தினரை உபசரிக்க வயலில் விதைத்த நெல்லைக் கொண்டு வந்து பக்குவமாக்கிச் சோறு சமைத்து கறியமுது இல்லை என்பதற்காக தோட்டத்தில் இருந்த கீரைகளைப் பறித்தார். இந்த இடத்தில் சேக்கிழார் பெருமான் பாசப் பகையை அறுத்தெறிவது போல கீரைகளைக் குழியிலிருந்து பறித்தார் என்று கூறுகிறார்.

இறைவனை அடைய முயலும் ஆன்மா தனக்கும் ஆண்டவனுக்கும் இடையில் உள்ள பாசத் திரையை முதலில் அகற்ற வேண்டும். பின்னர் இறைவன் தியானத்தால் அவன் திருவடிப்புணை பற்றி ஆசைக் கடலைக் கடக்க வேண்டும். இவ்வாறு கடக்க முயலும் போது இடையூறுகள் பல உண்டாகும். நம்மால் இந்தக் கடலைக் கடக்க இயலுமா, என்ற திகில் உண்டாகும். குருநாதர் திடமாக நீ இரு என்ன தான் நடக்கும். நமக்கு அந்த பாகம் வந்திடுமோ. இறைவன் நம்மைக் காக்க வருவானோ என்று திகில் அடையாதே, அச்சங் கொள்ளாதே. கடவுளை நம்பினோர் கைவிடப்படார். அடியார்களைக் காப்பதே அவன் வேலை. அதற்காகவே கங்கணம் கட்டிக் கொண்டுள்ளான். எப்படியும் காத்திடுவான் என்று நம்பு. நம்பிக்கையே பலம். பயம் வேண்டாம் என்று ஆறுதல் அளிக்கிறார்.

பாசமாகிய திரையை வைராக்கியம் என்ற வாளால் வெட்டி இறைவன் திருவடிகள் என்ற புணைபற்றி ஆசையாகிய கடலைக் கடக்கும்போது, பக்குவம் நமக்கு இல்லையே என்று அஞ்சாதே. வடத்தைக் கையில் பிடித்து விடு. உள்ளேயிருக்கும் உடையவன் இழு இழு என்று ஊக்கி விரைவில் கரை சேர்த்து விடுவான் என்று அபயம் அளித்து. ஊக்கம் கொடுக்கும் உபதேசங்களை அருள்கிறார் குருநாதர்.

31 ஆசை யொழித்து விடு அபிமானம் விட்டுவிடு
பாசம் ஒழித்து விட்டால்—ஏ குயிலே
பரமபதம் சேர லாமே.

ஓரறி வுயிர்கள் முதல் ஆறறி வுயிர்கள் ஈருக எல்லா உயிர்களுக்கும் ஆசை உண்டு. ஆசையில்லாத உயிர்களே இல்லை, ஆசைகள் பலவிதம். உணவின் மீதாசை, உடையின் மீதாசை, செல்வத்தின் மீதாசை, மனைவி மீதாசை எனப் பல வகையான ஆசைக் கடலுள் அழுந்தித் துன்புறுகின்றன உயிர்கள். ஒரு ஆசை நிறைவேறினல் வேருெரு ஆசை முளைக்கின்றது. நிறைவேருத போது வெகுளி இன்னுச் சொல்போன்ற தீமைகள் முளைக்கின்றன. ஆசையுடையவன் இன்பம் அடைவது எப்போதும் இல்லை

ஒரு மகானிடத்தில் ஒருவர் சென்று "ஐயா நான் முத்தியடைய என்ன செய்யவேண்டும்" என்று கேட்டார். அம்மகான் நீ இப்போது என்னென்ன செய்துக் கொண்டிருக்கின்ருயோ அவற்றை விட்டொழித்தால் பரமபதமாகிய முத்தி அடையலாம் என்ருர். செய்து கொண்டிருப்பது என்ன? உலக பந்த பாசங்களுக்காக அல்லும் பகலும் ஓயாது உழைக்கின்ேேரும். இந்த பந்த பாசங்களுக்கு மூலாதாரமாக உள்ளது ஆசை. இதை ஒழித்து விட்டால் இன்பநிலையடையலாம்.

ஒரு வேடிக்கை என்னவென்ருல் நாம் துன்பத்தை இன்பமாக எண்ணிக் கொண்டிருக்கிேேரும். தெருவில் கிடக்கும் ஒரு எலும்புத் துண்டைக் கடிக்கும் நாய் தன் வாயிலிருந்து வரும் நிண நீரையே இன்பமாகக் கருதி மீண்டும் மீண்டும் சுரண்டுகிறது. இந்த உலக ஆசைகளும் அப்படித்தான். தான் நினைத்தபடி ஒரு ஆசை நிறைவேறினல் இன்பம் அடைகிருன் மனிதன். இவ்வின்பம் நிலையானதா? இல்லை. துன்பமே கலவாத இன்பம் எது? ஆசையற்ற இடம் அதுதான் பரமபதம். அங்குதான் இறைவன் திருவடிகள் உள்ளன." யான் எனதென்றற்ற இடமே திருவடி' என்பது குமரகுருபரர் அருள்வாக்கு.

குருநாதர் எளிய வழி கூறுகிருர். மக்களே பரமபதமடைய வேண்டுமா? துன்பமற்ற இன்பநிலையில் வாழ வேண்டுமா? இல்லறத்திலிருந்துக் கொண்டே முத்தியடைய

வேண்டுமா. இங்கே வாருங்கள். தற்போது எந்தெந்த ஆசைகளுக்காக அலேகின்றீர்களோ அந்த ஆசைகளே விட்டொழித்து விடுங்கள். குருநாதா! ஆசைகளே எப்படி ஒழிப்பது! இல்லறத்தானுக்கு ஆசைகள் இருப்பது இயல்பு தானே என்று கேட்கின்ற மக்களே நோக்கி, குழந்தைகளே "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பது நீங்கள் அறிந்தது தானே. செய்யும் செயல்களில் ஆசை வைக்காமல் செய்யுங்கள். அந்தப் பலன் இறைவனுக்கு என்று எண்ணிச் செயல் படுங்கள். உங்களுக்கு வருகின்ற நன்மை தீமைகளே ஈசன் நமக்குத் தந்தது என்று பொறுமையோடு ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போது ஆசை தானுக ஒழிந்து விடும் என்று அருள்கிருர். சொல்வது எளிது, செய்வது கடினம். ஆனுல் பழக்கப் படுத்திக் கொள்ள வேண்டும். மனம் சேரும் இனத்தின் தன்மையது. ஆசையற்ருேருடன் பழகுவதாலும், அருளாளர்களின் வரலாறுகளேக் கேட்பதாலும் ஓரளவு ஆசையைக் குறைக்கலாம்.

ஆசையின்றி வாழலாம். ஆனுல் அபிமானம் இன்றி வாழ இயலாதே என்று எண்ணுகின்ருேம். அபிமானம் என்பது என்ன. நான் என்ற எண்ணம். நான் எவ்வளவு பெரியவன்? என்னே இவ்வாறு இகழ்ந்து பேசிவிட்டானே என்று கூப்பாடு போடுகிருேம். தன்னேப் பற்றிய கருத்து மானம். பெரியோர்கள் இகழையும், புகழையும் ஒன்ருகவே எண்ணினர். மகான் இராமகிருட்டிணர் தன்னேத்தானே இகழ்ந்து கூறிக்கொண்டு தனக்கு அபிமானம் உள்ளதா என்று சோதித்து அறிந்தார்.

நாம் இறைவனுக்கு அடிமை என்ற எண்ணம் வரும் போது நம் அபிமானம் அடியோடு ஒழிந்துவிடும். எல்லாம் உன்பரம். என் செயலாவது ஒன்றும் இல்லே என்று எண்ணும் போது இகழும், புகழும் நமக்கு ஒன்றும் இல்லே. புராண இதிகாச வரலாறுகள் இதையே நமக்கு உணர்த்துகின்றன. சுவாமிகள் பரமபதமடைய எளிய வழி கூறுகிருர். ஆசை ஒழித்து விடு. அபிமானம் விட்டுவிடு. என்கின்ருர். ஆசை இல்லாமலும், அபிமானமில்லாமலும் இருக்கலாம். ஆனுல் பாசம் இல்லாமல் வாழ முடியாதே, எல்லாப்பற்றும் விட்டவர் என்ற நிலேயில் உள்ளவர்களும் பாசத்தால் துன்புற்ற கதைகளேப் பார்க்கின்ருேம்.

பாசத்தை ஒழித்துவிட்டால் பரமபதம் சேரலாம் என்று கூறுகின்றார் சுவாமிகள் எப்படி ஒழிப்பது? நாமாக ஒழிப்பது என்பது இயலாது. பல காலமாக நம்மோடு ஒட்டி உறவாடி வருவது; பல பிறவிகளாக உடன் உறைவது; ஒழிப்போம் என்று ஆரம்பித்தால் அது பலவாகப் பெருகி நம்மை கதி கலங்கச் செய்யும். செம்புப் பாத்திரத்தில் தேய்க்கத் தேய்க்கக் களிம்பு வருவதே போல ஆன்மாவுடன் அகற்ற முடியாமல் ஒட்டி இருப்பது பாசம். இது பெரும் பகை. இதை அடியோடு ஒழித்தால்தான் இறைவனை அடைய முடியும் என்று உணர்கிறது ஆன்மா.

குருநாதர் இதற்கு வழியை வேறோர் இடத்தில் விளக்குகின்றார். "பாசப்பகையை அறுத்து ஸ்ரீ ஓம் என்ற பஞ்சாக்ஷரத்தை நிறுத்து" இறைவன் திருவடித்தியானமும் திருநாமத் தியானமுமே இந்தப்பாசப் பகைக்கு மருந்துகளாம். ஒளி கண்டவுடன் இருள் விலகுதல் போல கல் எறிந்தவுடன் மரத்தில் அமர்ந்திருந்த பறவைகள் பறந்து ஓடுவதுபோல மனம் குவிந்து தியானத்தில் ஈடுபட்டால் பாசம் அடியோடு பறித்தெறியப்படும், ஒழியும். நமக்குப் பழக்கமான, நம் மனம் ஈடுபாடு கொண்ட தெய்வத்தின் திருநாமத்தை ஜெபித்து, திருவடிகளைத் தியானித்து ஆசை, அபிமானம், பாசம் முதலியன அகலப்பெற்றுப் பரமபதம் அடைவோமாக.

## மாயையைக் கடந்தால்

32. பொல்லாத மாயை தனைக் கடந்தால்
 பரிபூரண மாகும்.

ஒரு நல்ல செயலைச் செய்வதென்றால் இடையூறுகள் பல உண்டாகும். இஃது இயற்கை. அறம் செய்ய எண்ணுகின்றோம். அதைச்செய்யாதபடி தடுப்பவர் பலர் நம்மைச் சூழ்ந்திருப்பர். இறைவனைச்சற்று நேரம் தியானிப்போம் என்றால் அது முடியாதபடி புறத்தும் அகத்தும் தடைகள் வரும். இவ்வாறு ஒரு போராட்டம் ஆன்ம சாதகனுக்கு உண்டாவது இயற்கை. தடைகளைக் கடந்து இறுதியில் வெற்றி பெற வேண்டும்.

கருணையே வடிவான நம் தந்தை அருகில் செல்ல வொட்டாதபடி தடை செய்வது மாயை. இம்மாயை அசுத்த மாயை சுத்தமாயை என இருவகைப்படும். அசுத்தமாயை நம்மைக்கீழே இழுத்துத் தள்ளி விடும். அது செய்யும் ஜாலங் கள் உண்மையைப் போன்று தோன்றும். இறைவன் நம்மை மேல் நிலைக்கு அழைக்கிறான். இரண்டுக்கும் இடையில் ஆன்மா உள்ளது. மாயையின் தத்துவம் ஓங்கி நிற்கும் போது கீழான எண்ணம், சொல், செயல் இவற்றிற்கு ஆன்மா ஆளாகின்றது. இறையருள் மேலோங்கும் போது தூய எண்ணம், சொல், செயல் இவற்றிற்கு ஆன்மா ஆட்படு கின்றது ஒரே ஆன்மா ஒவ்வொரு சமயம் செய்யும் நற் காரியங்களுக்கும், தீய காரியங்களுக்கும் இதுவே காரணம்.

மாயை வலையினுட்பட்டு மயங்கிச் செயல் பட்டபின் அதனால் வரும் துன்பத்தை உணர்கிறது ஆன்மா. இப்படிச் செய்து விட்டோமே. நம் அறிவு மங்கிவிட்டதே. நாம் கற்ற கல்வி முழுதும் பயனற்றதாய்ப் போய்விட்டதே என்று வருந்தும்

இறையருளால் செயல்படும்போது முடிவில் நிலையான இன்பம் கிடைக்கும் ஆஹா! என்ன ஆனந்தம். இப்படியே இறைவனின் இன்பத்தில் திளைத்து இருந்துவிட்டால் என்ன என்று எண்ணுவான். அது ஒரு கணம்தான். மீண்டும் மாயை தலை தூக்கும் மாயையின் பங்கே அதிகம். இவ்வாறு அல்லல் உற்று ஆற்றாது இனி இம்மாயையில் சிக்கித் தவிக்க முடியாது என்று எண்ணும் போது நிலையான பரிபூர்ணத்தைப் பற்றிய நினைவு தோன்றுகிறது. மாயையில் சிக்கிக் கொண்டோம் இதை விட்டு நீங்கினால்தான் இறையருள் கிட்டும் என்பதைச் சான்றோர் மூலமும், ஆன்றோர் வரலாறு மூலமும் அறிகிறது ஆன்மா.

இந்நிலையில் சான்றோர்கள் மாயையைப்பற்றிக் கூறியவை நினைவிற்கு வருகின்றன. எல்லா ஞானிகளும் மாயையின் கொடுமைகளைப் பல பட விரித்துக் கூறுகின் றார்கள். மணிவாசகப் பெருமான் "ஆறு கோடி மாயா சக்திகள் வேறு வேறு தம் மாயைகள் தொடங்கின" என்று அருளுகின்றார்.

குருநாதரும் தம் அருட்பாடலில் வேறோர் இடத்தில் 'பெண்ணரசே உனை நம்பிக் கெட்டகதை பேச ஆதிசேடனால் முடியா, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் மாண்டார்கள். உன்றன் மயக்காலே'' என்று மாயை எவ்வாறு விண்ணுலகத்தாரையும் ஆட்டுவிக்கின்றது என அருளுகிறார். தேவேந்திரன் முதல் தேவர்கள் எவ்வாறு மாயையால் அவதிப்பட்டார்கள்: என்பதைப் புராணங்கள் மூலம் அறிகிறோம்.

இப்பொல்லாத மாயையைக் கடக்க வேண்டும். இதற்கு என்ன வழி? கடந்தால்தான் பரிபூர்ண நிலையை அடைய முடியும். பரிபூர்ண நிலை அடையாமல் இருக்க இயலாது, இந்நிலையில் மாயையின் அளவற்ற ஆற்றலைக் கண்டு வியப்பும், நம் இயலாமையைக் கண்டு அச்சமும், எப்படிக் கடக்கப் போகின்றோம் என்ற திகைப்பும் இடைவிடாமல் ஆன்ம சாதகனை வாட்டுகின்றன.

இந்நிலையில் சாதகன் என்ன செய்ய வேண்டும்? அசைக்கலாகாத உறுதி வேண்டும். வைராக்கியம் என்று அதை ஆண்டவர் குறிக்கின்றார். திட வைராக்கியம் வேண்டும். என்ன ஆனாலும் நம் குறிக்கோளை அதாவது பரிபூர்ண நிலையை அடையும் வரை என் உறுதியை நான் விட மாட்டேன் என்ற திடம் வேண்டும். பெரிய புராணம் ஆழ்வார்கள் சரிதம் பக்த விஜயம் போன்ற கதைகள் இத்திட வைராக்கியத்தையே நமக்கு உணர்த்துகின்றன. வெறும் வைராக்கியம் மட்டும் போதாது. உடன் இறைவனிடம் பக்தி வேண்டும். அவன் அருள் துணை கொண்டே மாயையைக் கடக்க முடியும். எனவே அவன் அருளுக்காக உருகி வாடும் திட பக்தி வேண்டும்.

இந்த இரண்டும் இருந்து விட்டால் மாயையை நிச்சயம் கடக்கலாம். சேற்றில் வாழும் மீனின் உடம்பில் சிறிதும் சேறு ஒட்டாதது போல மாயையால் உண்டாகும் துன்பம் பக்தியும் வைராக்கியமும் உடையவனை ஒட்டாது.

இக் கருத்துக்களை தன்னுள் அடக்கியே இந்த அருட்பாடலின் அடிகள் விளக்குகின்றன.

பொல்லாத மாயை தனைக் கடந்தால் பரி பூரணமாகும். இவ்வாறு மாயையைக் கடந்தவன் நிச்சயம் பரி பூர்ண நிலையை அடைவான் என்பது உறுதி.

## மனோ வாக்குக் காயங்களை ஒப்படைத்தல்

33. மனோவாக்குக் காயங்கள் மூன்றும் உன்னிடமாக
வைத்த நாள் முதலாக வருகின்ற செயலெல்லாம்
உனக்கே பொறுப்பல்லாது எனக்கினிச் சுமையேது?

உயிர்கள் அசையும் இயல்புடையவை. அசையாமல் இருப்பது அதன் வளர்ச்சிக்கு இடையூறு எனப்பகர்வர். மனத்தின் அசைவு கண்ணுக்குத் தெரியாது. ஆனால் மிகச் சக்தி வாய்ந்தது. அடுத்தபடி உள்ளது வாக்கின் அசைவு. இது ஒலி வடிவில் கேட்கப்படுவது. மூன்றாவதாக உள்ளது உடலின் அசைவு. இது கண்ணுக்குத் தெரியும். இவ்வாறு புழு பூச்சி முதல் எல்லா உயிர்களும் மனோ வாக்குக் காயங்களால் அசைகின்றன. எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றால் புண்ணிய பாவம் சேருகின்றது. இதன் பயனால் பிறவி உண்டாகிறது. எனவே எல்லாப் புண்ணிய பாவங்களுக்கும் இம்மூன்றின் அசைவு காரணம் ஆகின்றது.

இச்செயலை ஜீவனின் செயல், சிவனின் செயல் எனப் பாகுபடுத்தியுள்ளனர் ஞானிகள். பற்று உள்ளவன் செய்யும் செயல் ஜீவனின் செயல். பற்றில்லாதவன் செய்யும் செயல் சிவனின் செயல்.

ஆசையால் மயங்கி உலக பந்த பாசங்களுக்குட் பட்டு மனோவாக்குக் காயங்களால் எண்ணி, சொல்லி, செயல் படும் போது உண்டாகும் நல்வினை தீவினை இரண்டும் செய் பவனைப் பற்றிக் கொள்கின்றன. இதனையே "நம் உயர்வுக்கும் தாழ்வுக்கும் நாமே காரணம்" என்றும், 'தீதும் நன்றும் பிறர் தரவாரா' என்றும் உரைத்தனர் பெரியோர். நம் எண்ணத் தாலும் சொல்லாலும், செயலாலும் நமக்கு நாமே நன்மையையும், தீமையையும் விளைவித்துக் கொள்கின்றோம். பற்றினால் வரும் செயல் இது. பற்றற்றவர்களின் கரணங்கள் யாவும் பதி கரணங்களாக மாறி விடுகின்றன. அவர்கள் தங்கள் இச்சைப்படி அன்றி இறைவன் இச்சைப்படி

யாவும் செய்கின்றனர். அவர்களின் அசைவு யாவும் இறைவனின் அசைவுகளாகவே உள்ளன.

தான் என்னும் நினைவு இன்றிச் செயல் படுகின்றார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் தம் பசு கரணங்களை பதிகரணங் களாக மாற்றி விட்டார். எனவே அவர் உடலை கனலும், விடமும், ஒன்றும் செய்ய இயலவில்லை கடலில் கட்டி விட்ட போதும் மிதந்தார். ஏன்? அவர் உடலில் பசுகரணங்களின் செயல் ஏதும் இல்லை. எல்லாம் பதிகரணங்களின் செயல்களே.

பிரகலாதாழ்வாரும் அவ்வாறே. எல்லாம் நாரணன் செயலாகவே இருந்ததால் மலை மீதிருந்து உருட்டிய போதும் வாளால் வீசிய போதும் ஊறு ஏதும் இன்றி இருந்தார்.

சண்டேசுர நாயனார் என்னும் பெருமான் சிவ பெருமானின் மீது வைத்த அன்பால் தம் கருவி கரணங்கள் அனைத்தையும் அப்பதிக்கே ஒப்புக் கொடுத்து விட்டார். சிவபூசை ஒன்றைத் தவிர அவர் சிந்தையில் வேறு எண்ணங்கள் இல்லை. அவர்தம் தந்தையார் வந்து பூசைக்கு வைத்திருந்த பாற் குடத்தை இடறிய போதும் அவர் அறிந்தாரில்லை. பூசைக்குப் பால் இல்லை என்பதறிந்து அருகிருந்த குச்சியால் எறிந்தார். குச்சி மழுவாக மாறியது. பூசைக்குரிய பாலை இடரியவரின் காலைத் துண்டித்து விட்டது, தன் தந்தை என்ற பற்று சிறிதும் இன்றி சிவச் செயலாகவே செயல் பட்டார்.

ஆறே நாளில் முத்தியை அடைந்த திருக்காளத்திக் கண்ணப்பர் தம் கருவிகரணங்களை பதியினிடத்தே பதிய வைத்திருந்ததால் இறைவனுக்குரிய செயலைத் தவிர வேறு ஒன்றும் அறியாதவரானார். இவ்வாறு சிவச்செயலாகவே இருக்கும் அடியார்கள் மனத்தில் என்ன எண்ணுகின்றார்களோ அதை இறைவன் உடனே நிறைவேற்றித் தருகிறார். "அடியவர் இச்சையில் எவை எவை உற்றன அவை தருவித்தருள் பெருமாளே" என்று அருணகிரிநாதர் அருளுகின்றார்.

அவ்வடியார்கள் கூறும் சொற்களை அப்படியே நிறை வேற்றுகின்றார் இறைவன். நிறைந்த அமாவாசையைப் பௌர்ணமி என்று தம்மை அறியாது இறையின்பத்தில்

திளைத்தவராய்க் கூறிய அபிராமிபட்டரின் கூற்றை மெய்ப்பித்தாள் அபிராமி.

ஒரு மகான் அவதூதர். அவர் பெயர் சதாசிவ பிரம்மேந்திரர். முகலாயர் தெருவழியே நடந்தார். கண்ட முகலாய அரசன் அவரை வாளால் வீசினான். அவரது வலது கை அறுபட்டுக் கீழே விழுந்தது. அதைச் சிறிதும் கவனிக்காமல் அறுபட்ட கை கீழே கிடக்க நடந்து செல்கிறார் மகான். கண்டான் அரசன். இவர் பெரிய மகான் என்பதை அறிந்து கொண்டான். தான் செய்த தவறுக்கு வருந்திக் கீழே கிடக்கும் கையை எடுத்துக் கொண்டு ஓடிச் சென்று மகானை வணங்கி "தங்கள் பெருமை தெரியாமல் இவ்வாறு நடந்து கொண்டேன். மன்னிக்க வேண்டும்" என்று கூறி கையை நீட்டினான். உம் என்றார் மகான். கை ஒட்டிக் கொண்டது. அவர் செயல் எல்லாம் இறைமயமாகவே இருந்தன. எனவே தனக்கும் உடலுக்கும் பற்றின்றி வாழ்ந்தார்.

இவ்வாறு மனம் வாக்குக் காயம் ஆகிய மூன்றையும் இறைவன் திருவடிகளில் வைத்து, அவன் செயலாகவே நடக்கும் போது வரும் புகழும் இகழும் இவர்களைப் பற்றுவதில்லை.

குருநாதர் இவ்வுபதேசத்தின் மூலம் பற்றின்றி வாழ்; பரமன் செயல் என எண்ணி வாழ். நன்மை வரும் போது மகிழாதே. தீமை வரும் போது துயரப்படாதே. எல்லாம் அவன் செயல் என எண்ணி அவனிடம் ஒப்புக் கொடுத்து வாழ். என்ற அரிய பெரிய உண்மையை விளக்குகின்றார், இது மிக உயர்ந்த நிலை. இதுவே வேண்டப்படுவது.

## இறைவன் தன்மை

**34. எல்லையற்ற பரஞ் சோதியடி—அவன்**
**எங்கும் நிறைந்தப்ர காசனடி**

காலையில் கிழக்கில் உதிக்கின்றான் சூரியன். செஞ் ஞாயிற்றின் அப்பேரழகினைக் கண்ட நக்கீரர் பெருமான் முருகனின் காட்சிக்கு ஒப்பிடுகின்றார். அதே சூரியன் உச்சி

வானத்தில் வருகின்ற போது நம் கண்ணுல் காண இயலவில்லை கூசுகின்றது. அதற்கு வேறு கண்ணுடி அணிந்து காண வேண்டும். கார்காலத்து மின்னலைக் காண இயலவில்லை. சேய்மையில் காணப்படும் விண் மீன்களை அருகில் சென்று காண முடியாது என்கின்றனர் விஞ்ஞானிகள்.

நாம் கண்ணுல் காணும் இவ்வொளிகளே இந்நிலையில் இருக்க காணவொண்ணுப் பெருஞ்சோதியாம் இறைவனின் நிலை என்ன? உருகி வாடி பக்குவப்பட்ட உயிர்களுக்குத் தனது அளப்பரும் காட்சியைக் காட்டியுள்ளான் இறைவன் எனப்புராணங்கள் கூறும். குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் அருச்சுனனுக்குத் தெளிவருளும் பொருட்டுக்கண்ணன் தனது விசுவ ரூபத்தைக்காட்டி, அதைக்காணும் ஞானக்கண்ணும் தந்தருள்கிறுன். கந்தபுராணத்தில் முருகப் பெருமான் சூரபத்மனுக்குத் தன் பேரருளுருவைக் காட்டி அதைக் காணும் ஞானக் கண்ணும் தந்தருளினுன் என்று கூறப் படுகிறது.

இவ்வாறு எல்லை கடந்த பேரருள் பிழம்பான பெருஞ் சோதியை ஞானிகள் தத்தம் தவநிலைக்கேற்பக் கண்டார்கள். முருகப்பெருமானின் திருவடிப் பேரொளியை "உததியிடை கடவுமர கதவருண குலதுரக உபலளித கனகரத சதகோடி சூரியர்கள் உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை யுக முடிவின் இருளகல வொருஜோதி வீசுவதும்" என அருணகிரி நாதர் சீர்பாத வகுப்பில் கூறியுள்ளார். யாராலும் இறைவனின் நிலையை அளந்து கூற இயலாது. எனவே சுவாமிகள் எல்லையற்ற பரஞ்சோதியடி என்று குறிப்பிடு கின்முர்.

எல்லையற்ற பரஞ்சோதியான அவன் உறையும் இடம் எது? என்ற ஐயத்திற்கு அவன் எங்கும் நிறைந்த ஒளி உடையவன். அவன் ஒளியின் பிரதிபலிப்பே சூரியன், சந்திரன் விண் மீன், நெருப்பு முதலியவற்றின் ஒளிகளாகும். எனவே இறைவன் அளவற்ற பெருஞ்சோதியாகவும் அளவற்ற ஒளி மயமாகவும் விளங்குகின்முன் என்பது பெறப்படுகின்றது.

35. அன்பரைக் காக்கும் அருளுடையோன்—அவன்
ஆனந்தம் காட்டி மறைந்திடுவான்

உலகைப்படைத்துக் காத்து அழித்து மறைத்து அருளி அலகிலா திருவிளையாடல் செய்யும் இறைவனுக்கு உகந்த செயல் யாது என்று நோக்குங்கால் அடியாரைக் காப்பதே என்பது புராண இதிகாசங்களால் அறியப்படும் உண்மையாகும்.

உள்ளக்கிழியில் உருவெழுதி இறைவனையே தியானித்துக் கொண்டிருக்கும் அடியாரைக் காப்பதே அவன் தொழில். பெரிய கல்லில் கட்டி கடலில் தள்ளிய போதும் தம்மைக் கரை சேர்ப்பது (காப்பது) இறைவனின் திருநாமமே என்று கூறுகின்றார் திருநாவுக்கரசு பெருமான். திருமங்கை ஆழ்வார் "குலந்தரும்" என்று தொடங்கும் திருப்பாசுரத்துள் "அடியார் படுதுயர் ஆயின எல்லாம் நிலந்தரஞ்செய்யும்" என்று அருளுகின்றார்.

அவ்வடியார்கள் வியக்கும் வண்ணம் ஆனந்தக் காட்சிகள் காட்டுவான் இறைவன். அவ்வானந்த நிலையில் திளைத்து நிற்கும் போது தன் உருவைக் காட்டி மறைந்திடுவான். மணிவாசகப் பெருந்தகைக்குக் குருந்த மர நிழலில் தன்னுருக் காட்டி பேரானந்த மூட்டி, பின்னர் மறைந்த செய்தி உலகறிந்ததே. இவ்வாறு இறைவனின் பேரானந்தத்தில் ஒரு முறை திளைத்த அடியார்கள் அதையே நினைத்து ஏங்குவார்களேயன்றி மற்றைப் பொருள்களை மதியார். இக் கருத்தினை சுவாமிகள் தம் அருட்பாடலில் கணவனை அறிந்த மங்கை கனவினு மறந்து நெஞ்சமயர் வாளோ" என்று மற்றோர் இடத்தில் குறிப்பிடுகின்றார்.

## இறைவன் எங்கும் நிறைந்தவன், எல்லாம் ஆனவன்

36. சரம், அசரங்கள் யாவும் அவன் என்று
சத்தியமாகச் சுருதி சொன்ன மொழி

கூடவுள் என்ற சொல்லுக்கு எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்பவன், எல்லாப் பொருள்களினுள்ளும் இருப்பவன் என்பது பொருள். இவ்வுலகைப் படைத்து அதனை

ஒழுங்காக இயக்கும் பெருந்தலைவனுகிய இறைவன் அதன் வெளியே நின்று அசைவற்று நிற்கிருன், அதன் உள்ளே உள்ள சரம் அசரம் ஆகிய எல்லாப் பொருள்களினுள்ளும் ஊடுருவி இருக்கின்றுன்.

இக்கருத்தை சுவாமிகள் தம் அருட்பாடலில்

"எங்கெங்குந் தானுய் இருந்தர சாட்சிகள்
எப்படிச் செங்கோல் செலுத்துவது
அங்கங்குந் தன்னை யறியாமலே பூத
சாட்சியாய் நின்றது மூலமடி"

என்று குறிப்பிடுகின்றுர்.

"அவனன்றி ஓர் அணுவும் அசையாது" என்பது பழமொழி. எல்லாப் பொருளிலும் இறைவன் இருந்து ஆட்டுவிக்கின்றுன் என்பது உலகறிந்த ஒன்று.

இந்த உண்மை நாம் அறிந்ததாயினும் அடிக்கடி மாயையால் மறந்து பிற உயிர்களைத் துன்பப்படுத்துகின்றேம். நாம் துன்பப்படுத்துவதனுல் உண்டாகும் பாவம் நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. நாம் அதைப் பற்றி நினைப்பதுமில்லை. உயர்திணை அஃறிணை ஆகிய எல்லாப் பொருள்களினுள்ளும் இறைவன் நிறைந்திருக்கின்றுன் என்ற உண்மையை வேதங்கள் அருளிய பெரியோர்கள் உணர்ந்து நமக்கும் உணர்த்தியிருக்கிருர்கள். இது உண்மை என்பதை மிக அழுத்தமாக உணர்த்துகின்றுர் சுவாமிகள். 'சத்தியமாக' என்ற சொல் இதை உணர்த்துகின்றது.

எனவே எக்காரணங் கொண்டும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்தல் ஆகாது என்பதும் எல்லா உயிர்களையும் இறைவனுக எண்ண வேண்டும் என்பதும், மக்களுக்குச் செய்யும் சேவையே மகேசன் சேவை என்பதும் பெறப்படுகின்றன.

37. "பச்சிலை என்றும் பறிக்கத் துணியாதே
சச்சிதா னந்தமென்(று) ஆரும் தெரிந்திலர்"

"பண்ணேன் உனக்கான பூசை'யொரு வடிவிலே பாவித்திறைஞ்ச ஆங்கே பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி" என்று தாயுமானவர் அருள்கிருர். கர்மம் செய்பவர் வேள்வி

யிலும்; பக்தன் சிலையிலும் யோகி தன்னுள்ளும், ஞானி உலகெங்கும் இறைவனைக் காண்கின்றான் என்பது ஆன்றோர் வாக்கு. இந்த நிலையில் தாயுமானவர் இறைவன் பூசனைக்கு மலர் பறிக்கச் சென்றபோது அம்மலரில் இறைவன் உருவைக் கண்டு அதனைப் பறிக்க மனமில்லாமல் விடுகின்றார். முதிர்ந்த ஞானிகளின் நிலை இது.

ஓரறிவுயிரான புல்பூண்டு முதலியவற்றிற்கும் தீங்கு செய்தலாகாது என்பது இதனால் பெறப்படுகின்றது. இன்று பெரிதும் வேண்டப்படுகின்ற ஜீவகாருண்யம் இத்தகைய உபதேசங்களால் நம் மனதில் வேரூன்றுகின்றது. அசையும் பொருள் அசையாப் பொருள் ஆகிய அனைத்திலும் இறைவன் இருக்கின்றான் என்ற உண்மையை உணர்த்தவே இவ்வாறு ஞானிகள் அறிவுறுத்துகின்றனர்.

வெறும் பச்சிலை தானே பறித்து விடலாம் என்று எண்ணுதல் கூடாது. அப்பச்சிலையுள்ளும் சச்சிதானந்தப் பொருளான இறைவன் உறைகின்றான். வீணாக எப்பொருளுக்கும் துன்பம் விளைவிக்காதே என்பது இதன் கருத்து.

அப்படியானால் உண்பதற்கும் ஒன்றையும் பறிக்கக் கூடாதோ? பிறகு நாம் எப்படி உயிர் வாழ்வது என்ற ஐயம் எழும். நாம் உண்பதற்காக காய் இலை முதலியவற்றைப் பறிப்பதும் தவறே. அதனால் பாவம் வரும். அப்பாவத்தைப் போக்கவே சமைத்ததை இறைவனுக்கு ஆராதனை செய்து நாம் செய்த பாவத்தை மன்னிக்கும்படி உருகி "இறைவா நான் உயிர் வாழ உணவு தேவைப்படுகின்றது. அதன் பொருட்டே இக்காய் இலை முதலியவற்றைப் பறித்தேன். இதனால் வரும் பாவத்திலிருந்து எனக்கு மீட்பளிப்பீராக? என வேண்டி பிற . உயிர்களுக்கும் அவ்வுணவைப் பகிர்ந்து கொடுத்த பின்னரே நாம் உண்ண வேண்டும் என பெரியோர் கூறுவர்.

நம்மால் இயன்றவரை பிற உயிர்களுக்குத் துன்பம் தராமல் இருந்து எல்லா உயிருள்ளும் இறைவனைக் காண வேண்டும் என்பதே இதன் கருத்து.

## உடல் பொருள் ஆவி

38. "உத்தமர்கள் ஆவிகாயப் பொருளை
நேயமாய்த் தத்தம் அளித்து. ஆனதோர் சற்குருவின்
பாதமே நித்யமென அடைவார்கள்."

தாய் தந்தையர்க்கு அடங்கி நடக்கும் ஒரு மகன். திருமணமாகி குழந்தை, மனைவி அனைவரும் உள்ளனர். எச் செயலைச் செய்வதானாலும் அப்பாவைக் கேட்காமல் ஏதும் செய்ய மாட்டான். குடும்பத்தில் எந்த செயல் நடந்தாலும் அப்பாவின் பொறுப்பு. மகன் வேளா வேளைக்கு நல்ல உணவு உண்பான். வேலைகளைக் கவனிப்பான். நிம்மதியாக வாழ் கிறான்.

இன்னொரு மகன் தந்தை சொற் கேளாமல் தன்னிச் சைப்படி நடக்கின்றான். தீய நட்பு உடையவன்; மனைவி மக்கள் அவனை மதிப்பதில்லை. எந்தப் பிரச்சினையை எப்படிச் சமாளிப்பது என்ற தெளிவு அவனுக்கில்லை. இப்படியாக அவன் நிம்மதியின்றி வாழ்கிறான்.

உயர்ந்த உண்மை நெறியைக் காட்டும் சற்குருவை அடுத்து அவர் கூறும் நெறிப்படி வாழும் ஆத்மா, தந்தைக்கு அடங்கிய மகனைப் போன்றது. தன்னிச்சையின்றி எல்லாம் குருநாதர் ஆணைப்படி நேரிய வழியில் நடக்கிறான்.

குருநாதனை ஏற்றுக்கொண்டபின் அவரிடம் நம் உடல், பொருள் ஆவி அனைத்தையும் ஒப்புக் கொடுத்து அவர் திருவடிகளே கதி என வாழ வேண்டும். "அன்றே என்றன் ஆவியும், உடலும் உடமையெல்லாமும் குன்றேயனையாய் எனையாட் கொண்ட போதே கொண்டிலையோ? இன்றோர் இடையூறு எனக்குண்டோ? எண்டோள் முக்கண் எம் மானே! நன்றே செய்வாய், பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே?" என்று மணிவாசகப் பெருமான் தான் சிவ பெருமானுக்கு ஒப்புக் கொடுத்த விதத்தைக் கூறுகிறார். இதே கருத்தை சுவாமிகள் விளக்குகின்றார்கள். சற்குருவின் பாதமே நித்யமென எண்ண வேண்டும். குருநாதரைத் தவிர வேறு ஒன்றும் இவ்வுலகில் நிலையானது அல்ல என்ற எண்ணம் வரும் போது உயிரைப் பற்றியோ, உடலைப் பற்றியோ, பொருளைப் பற்றியோ எண்ணுவது குறையும்.

திருநாவுக்கரசு சுவாமிகளைத் தமது குருவாகக் கொண்ட அப்பூதி அடிகள் தன் இல்லத்தின் பெயர், குழந்தைகளின் பெயர், அறநிலையங்களின் பெயர் அனைத்துக்கும் குருநாதரது திருநாமத்தையே சூட்டி வாழ்ந்தார். உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவர் திருவடிகளுக்கே அர்ப்பணம் செய்தார். அதனால் பாம்பு கடித்து இறந்த மகன் உயிர் பெற்றெழுந்தான் அனைவரும் முக்திப் பேற்றையும் அடைந்தனர்.

அர்ப்பணம் செய்கையில் குருநாதரிடத்து மனப்பூர்வமான நேயத்துடன் கொடுக்க வேண்டும். கொடுக்கும் பொருள்களின் அளவைப் பற்றிக் கவலை இல்லை. கொடுப்பவனின் உள்ளத்தைப் பொறுத்தே உயர்வு தாழ்வு அமையும். மாசுமறுவில்லா உள்ளத்தோடும் உண்மை அன்போடும் அர்ப்பணம் செய்ய வேண்டும். இதனையே **"நேயமாய்த் தத்தமளித்து'** என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றார்கள்.

**39. உருகி, ஆவி பொருள் காயமொடு**
**தானமே கைமாறெனவும்**
**அத்தன் அடியைத் தொழுது தத்த மிடுவாய்.**

முத்திநிலையை அடைய வேண்டும் என்ற ஆவல் கொண்ட ஆத்மா அதற்கான வழிகளை ஆராய்கிறது. என்ன தான் சாத்திரங்களைக் கற்றாலும், உபதேசங்களைப் படித்தாலும் சரியான வழிகாட்டி இன்றி ஜீவயாத்திரை செல்லல் இயலாது. இக் கருத்தை "தத்துவ முழுதும் தெரிந்தும் சகல கலையுமுணர்ந்தும் சற்குரு வன்னியில் ஆகாதடி; முத்தி மோனநிலை கூடா" என்று மிகத் தெளிவாக சுவாமிகள் தம் அருட்பாடலில் விளக்கியுள்ளார்கள்.

ஆத்ம முன்னேற்றங்கருதும் ஜீவன் குருவைத் தேடும் ஆவல் கொள்ளும். குருவைத் தேடிக் கண்டபின் அவரோடு உறைந்து அவருக்கு ஆகும் சகல பணிவிடைகளையும் செய்து மும்மலம் நீங்கப் பெற்ற அந்த இடமே நித்தியம் என உணரும்.

முன்பு மாயையின் வசப்பட்டுக் கட்டுண்டு தன் நிலையழிந்து, தான் யார் என்பதையும் மறந்து மலமாகிய சேற்றில் ஆழ்ந்து கிடந்ததையும், தற்போது மலம் நீங்கப் பெற்று பாச பந்தம் அற்று ஆனந்த நிலையில் இருப்பதையும் உணரும்.

இவ்வாறு உணரும் நிலையில் குருநாதர் தனக்குச் செய்துள்ள பேருபகாரத்தை உன்னி உன்னி உருகுவான். இத்தகைய பேருதவியைச் செய்த குருநாதருக்கு நாம் என்ன கைம்மாறு செய்வது என்று எண்ணுவான்.

தன் உடல், பொருள், ஆவி இவற்றைத் தானமாகத் தரலாமா என்ற எண்ணம் தோன்றுகிறது. நமக்குச் சொந்தமானது என்று ஒன்றும் இல்லையே. இந்த உடலும் அவனுடையதே. நம்முடையது என்று எண்ணும் பொருளும் அவனுடையதே. இந்த உயிரும் அவன் அடிமையே. அவனுக்குக் கைம்மாறு என்ன கொடுப்பது? அவன் பொருள்களையே அவனுக்குக் கொடுக்கலாம் என்று எண்ணுகின்றான். உடல், பொருள், ஆவி ஆகிய இவற்றையே தானமாகக் கொடுக்க எண்ணும் போது அவன் செய்த பேருதவிகளை நினைத்து மேலும் உருக்கம் ஏற்படுகின்றது. குருநாதருடைய திருவடிகளைத் தொழுது வணங்குகின்றான்.

குருநாதர் வடிவில் எழுந்தருளியுள்ள இறைவா! என்னுடையன என நான் இதுவரை அறியாமையால் எண்ணிக் கொண்டிருந்த உடல், பொருள் ஆவி அனைத்தையும் உனக்கே தத்தமிடுகின்றேன்; இனி இவை என் பொருள்கள் அல்ல. உன்னுடையவை; உன்னுடையவை என தத்தம் கொடுத்து அனலிடைப் பட்ட மெழுகு போல் உருகி நிற்கும் நிலையே உயர்ந்த நிலை என சுவாமிகள் அருளுகின்றார்.

## வந்ததை ஒப்புக் கொள்வாய்

40. வந்ததை ஒப்புக் கொள்வாய்.........
வந்ததுவே சிவன் தந்ததென் றறிந்து
சிந்தை மகிழ்ந்தே தேறித் தெளிந்து
வந்ததை ஒப்புக் கொள்வாய்.

உலகில் வாழும் எல்லா உயிர்களும் இன்பமாக வாழவே எண்ணுகின்றன. ஆனால் அப்படி வாழ முடிகின்றதா என்று பார்த்தால் அதுதான் இல்லை. இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன. இன்பம் வருங்கால் மகிழ்தலும், துன்பம் வருங்கால் வருந்துதலும் செய்கிறோம்.

இம்மட்டோ நம் உடல் மிக அழகானதாக இருக்க வேண்டும் என்றுதான் எண்ணுகின்ருேம். ஆனுல் நம்மை விட அழகானவர்களேக் கண்டால் நாம் அழகாக இல்லேயே என்று ஏங்குகின்ருேம். நம் உடலே நாமே அழகாக அமைத்துக் கொள்ள இயல்வதில்லே.

நல்ல பெற்ருேர்களுக்கு தீயகுணமுடைய குழந்தைகள் தோன்றுகிருர்கள். தீய குணமுடைய பெற்ருேர்களுக்கு நல்ல குணமுடைய குழந்தைகள் பிறக்கின்ருர்கள். இவ் வாருக நம் வாழ்வில் எந்த ஒரு செயலே எடுத்துக் கொண்டாலும் அது நம் செயலால் ஆவது இல்லே. எங்கிருந்தோ ஆணே வருகிறது. அதற்கேற்ப நாம் அனுபவிக்கும் நன்மை தீமைகள் அமைகின்றன என்பது அறியப்படுகின்றது.

இவ்வாறு நமக்கு நன்மை தீமைகளாக வருபவை யாரால் அனுப்பப் படுகின்றன என்ருல் நம் நல்வினே தீவினே களே அவ்வாறு உருவெடுத்து வருகின்றன. திருவள்ளுவர் தம் குறட்பாவில் 'ஊழ்' என்ற அதிகாரத்தில் தெளிவாக இக் கருத்தை விளக்குகின்ருர்.

ஊழிற் பெருவலி யாவுள மற்ருென்று
சூழினும் தான் முந்துறும்''

என்றும் விளக்குகின்ருர். அவ்வூழை வகுத்தளிப்பவன் இறைவன், அவன் வகுத்தபடி எல்லாம் நடக்கும் "வகுத்தான் வகுத்தவகை யல்லால் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது" என்னும் குறட்பா இதனே விளக்கும். சுவாமிகள் இக்கருத்தை வலியுறுத்தவே வந்ததை ஒப்புக் கொள்வாய். என்று உபதேசம் அருள்கிருர், நீ விரும்பினுலும், வெறுத் தாலும் முன்பு இன்னதுதான் என்று வகுக்கப்பட்ட செயல் யாதொன்றும் நிற்காது. எனவே மன அமைதியுடன் நமக்கு வந்துள்ளது இறைவனுல் அளிக்கப்பட்டதென்றறிந்து மன மகிழ்வோடு தெளிந்த சிந்தனேயுடன் ஒப்புக் கொள்வாய்.

நமக்கு வருவன எல்லாம் நாம் முன்னர் விதைத்த விதைகளே என்பதறி. நெல் விதைத்தவனுக்கு நெல் வரும். கடுகு விதைத்தவனுக்குக் கடுகுதானே வரும்? நாம் இனி யாவது தீமை செய்யாது நன்மையே செய்வோம். முன்னர்

செய்ததை அனுபவித்து விடுவோம். என்ற மனப்பக்குவம் கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகின்ருர்.

ஆன்ம சாதகனுக்குச் சோதனைகள் வரும். அவனைப் பக்குவப்படுத்தவே அச்சோதனைகள் தரப்படுகின்றன. சோதனைகளுக்குக் கலங்காமல் இறைவன் கொடுக்கின்ற எதையும் ஏற்றுக் கொள்வோம் என்ற உறுதி வேண்டும். எதையும் படிக்கலாம்; கேட்கலாம். ஆனுல் செயல் முறையில் வருவது கடினம். சுவாமிகளின் உபதேசங்கள் யாவும் அனுபவங்களே. தாம் அனுபவித்து உணர்ந்த உண்மைகளை உலக உயிர்கள் உய்யும் பொருட்டு அருள் உபதேசங்களாக எடுத்து விளக்கியுள்ளார்.

## பெற வேண்டிய பேறு

41. கனகா பீடமதில் நின்று நடித்திடு
கரிமா முகனடி சென்று துதித்திடு

நாம் இவ்வுலகத்தில் இருக்கிறோம். உலகத்தில் வாழ் வாற்ற நமக்கு உடம்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. கூர்ந்து நோக்கினுல் உலகமும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களும், உடம்பும், உடம்பிலுள்ள எல்லாக் கருவிகரணங்களும் இயங்கிக் கொண்டே இருப்பதைக் காண்கிறோம். இவ் வியக்கத்திற்கு மூல காரணம் உலகத்தின் ஒவ்வோர் அணுவிலும், உயிரின் ஒவ்வொர் அணுவிலும் நீக்கமற நிறைந்திலங்கும் இறைவனின் திருவருளே யாகும் என்பதை உணரலாம்.

ஆன்றோர்கள், அருளாளர்கள், மெய்ஞ்ஞானிகள் இவ்வுண்மையை அனுபவபூர்வமாக உணர்ந்து உலகுக்கு உணர்த்தியுள்ளனர். இக்காலத்தில் ஆராய்ச்சி புரியும் விஞ்ஞானிகளும். அகண்டாகாரமான பெருவெளியில் நாம் எண்ணிப் பார்க்க முடியாத எண்ணற்ற அண்டங்கள் இயங்கு கின்றன என்றும். அவையனைத்தும் ஆகர்ஷணசக்தியால் ஈர்க்கப் பெற்று வெவ்வேறு வகையான வேகங்களில் சுழன்ற வண்ணம் இயங்குகின்றன என்றும், இவையனைத்துக்கும் காரணம் யாதென மனித அறிவால் உணர்ந்து நிர்ணயிக்க இயலாதென்றும் வியப்புற்று ஒப்புக் கொள்ளுகின்றனர்.

'அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்' என்பது ஆன்றோர் அருளியுள்ள பழமொழியாகும். உடற்கூறு பற்றி ஆராயும் மருத்துவ நிபுணர்கள் மனித உடம்பின் இயக்கத்திற்குக் காரணம் இதயம் என்றும், அதில் ஒரு மா பெ ரு ம் சக்தி இருந்துகொண்டு இடைவிடாது இயக்குகின்றது என்றும் அந்த இயக்கத்தின் வேகம் கூடினாலும், குறைந்தாலும் உடம்பிற்குத் தீமையுண்டாகும் என்றும் கூறுகின்றனர் தூல உடம்பில் இவ்வுண்மையைக் காணும் மருத்துவ நிபுணர்கள் மனித அறிவால் உணர்ந்து கூறும் உண்மை இது.

சோற்றுடம்பாகிய தூல உடம்பின் இயக்கத்திற்கு சூக்கும உடம்பு காரணம் என்றும், அவை பிராணமயம் (காற்றுடம்பு), மனோமயம் (எண்ண உடம்பு), விஞ்ஞானமயம் (அறிவுடம்பு) என மூன்று வகைப்படும் என்றும், அந்தச்சூக்ம உடம்பின் இயக்கத்திற்குக் காரணம் ஆனந்தமயம் (இன்ப மயம்) எனும் உள்ளுடம்பு என்றும், இம்மூவகையாகக் கூறப் படும் (பஞ்சகோசம்) ஐந்து உறைகளை உயிர்க்களித்து, உள்ளும் புறமும் கலந்துநின்று இறைவன் உயிர்களை இயக்குகின்றான் என்றும் அருட்பெரியார்கள் அனுபவ நிறைவால் உணர்ந்து விளக்கியுள்ளார்கள்.

உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பையும், உலகத்துக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பையும், இவை அனைத்துக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பையும், எவ்வளவோ காலமாய் ஆற்றிய மாபெருந் தவத்தின் விளைவாகத் திருவருள் துணை கொண்டு மெய்ஞ்ஞான நோக்கால் உணர்ந்து, மிக மிக அற்புதமாக விளக்கியுள்ளார் கள் என்றால் என்னே அவர்தம் தவப்பெருமை! என்னே அவர் தம் அருளாற்றல்! என்று எண்ணி எண்ணி வியந்து போற்ற வேண்டியவர்களாயுள்ளோம்.

இறைவன் ஞானமயமானவன்; ஆனந்தமயமானவன். அவன் எல்லா உலகங்களையும், எல்லா உயிர்களையும் இயக்கு கின்றான். தான் அசையாமல் அனைத்தையும் அசைவிக் கின்றான். இச்செயலுக்கு அசையாமல் அசைதல் என்று குறிப்பிடுவது உண்டு. உலகத்தின் இதயஸ்தானம் தில்லை வெளி என்றும், அது சித்+அம்பரம் ஞான ஆகாயம் என்றும் கூறப்பெறும். ஆங்கு ஆனந்த நடனம் செய்பவர், நடராஜர் என்று போற்றப்பெறுவர்.

மற்றும் இரண்டு மூர்த்திகள் உண்டு. ஒருவர் தூங்காமல் தூங்குபவர்; அவர் அரங்கநாதர். மற்றொருவர் சொல்லாமல் சொல்பவர்; அவர் தக்ஷிணாமூர்த்தி; தூங்காமல் தூங்கும் நிலை வாய்க்கப்பெற்று, மேலும் முன்னேறினால் இதயஸ்தானம் சேரலாம். மேலும் முன்னேறினால், ஆயிர இதழ்த்தாமரையில் ஒளிமயமாய் இன்பமயமாய் விளங்கும் இறைவனைக்கண்டு பேரின்பம் பெறலாம். (இதனை விளக்கவே ஆயிரக்கால் மண்டபத்தில் தரிசனம் எனப் பெரியோர்கள் திருவிழா நடத்தும் முறையை வகுத்துள்ளார்கள்.) அப்போது அனைத்தும் விளங்கி விடும். பரமானந்த அனுபவம் மிகுந்து திகழும்.

மூலாதாரக்கனல் ஒளியின் துணையால்தான் தவம் என்னும் மாபெருஞ்செயல் நடந்தாக வேண்டும். பிரணவ சொரூபமாக விளங்கும் இறைவன்தான், எல்லா ஆதாரங் களிலும் தரிசனம் தருகிறான்.

இறைவன் எழுந்தருளியுள்ள பீடம் தங்கமயமான பீடம். தூய தங்கத்தில் அழுக்கில்லை. அதாவது களிம்பு கிடையாது மாசு மறுவற்ற தூய மனமே, பரிசுத்தமான உள்ளமே இறைவன் எழுந்தருளியுள்ள பீடம்; கனக பீடம் என்று ஆண்டவர் அதனைக் குறிப்பிடுகின்றார். மனத்தில் மாசு உள்ளதால் நாம் இறைவனைக்காண இயலவில்லை. மாசு நீங்கிய தங்கம் போன்ற தூய உள்ளத்தில் இறைவன் எப்போதும் நிலைத்து நின்று அருள் நடனம் புரியும் காட்சி தோன்றும்.

கனக பீடம் என்று சொல்ல வந்த சுவாமிகள் கனகா பீடம் என்று அருளியுள்ளார். எல்லா ஒலிகளுக்கும் மூலமும் நடுவும முடிவுமாய்த் திகழ்வது 'ஓம்' எனும் பிரணவம் ஆகும். அ+உ+ம் என்னும் மூன்றும் சேர்ந்தது பிரணவம் என்பர் ஆன்றோர். அம் மூன்றினும் முதன்மை வகிப்பது அகரம் ஆகும். அதனால்தான் 'அகரம் முதல எழுத்தெல்லாம்' என்றார் வள்ளுவர். ஆதலால் கனக மயமானதும், அகரம் எனும் அட்சர மயமானதும் இறைவன் திருவடித்தாமரை திகழும் இதயத்தாமரை என்னும் உயர் கருத்தை உணர வைக்கிறார் குருநாதர்.

இறைவன் காலாதீதனாய். ஆதி, நடு அந்தம் கடந்த வனாய், எல்லா உயிர்தொறும் எப்போதும் நிலைத்திருக்கிறான்

என்பதைக் குறிப்பிடவே 'கனகா பீடமதில் நின்று' என்று சுவாமிகள் அருளியுள்ள சிறப்பு போற்றற்குரியதாகும்.

இறைவன் ஓங்காரமயமானவன் என்பதை உணர்த்தவே 'கரி மாமுகன்' என்று கணேசரின் திருவுருவத்தை ஆண்டவர் நினைவூட்டுகிறார். அப்பெருமானின் திருவடி ஞான மயமானது. அத்திருவடியைத் துதிக்க வேண்டும். நாம் ஆசாபாசத்திற்குள் சிக்கியிருப்பதால் பல, வேலைகள் வைத்துக் கொண்டு, இறைவனை நினைக்க நேரமின்றி அல்லற்படுகிறோம்

அப்படி உள்ள மனம் அதே நிலையில் நின்று விடாமல், இறைவனை நாடி மேலே செல்ல வேண்டும். ஆசாபாசத்தை அவன் அருள்துணை கொண்டு சிறிது சிறிதாக விலக்கி, மேல் நாட்டம் கொண்டு முன்னேற வேண்டும். முன்னேறிச் சென்று துதிக்க வேண்டும் என்ற குறிப்பை ஆண்டவர் 'சென்று' என்ற சொல்லால் விளக்குகின்றார். அப்படிச் சென்று துதித்தால்தான், அவன் அருட்காட்சி கண்டு அருட்பேறு பெற இயலும். அவனருளின்றேல் நாம் ஓர் அணு வளவும் முன்னேற இயலாது. 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்ற மணிவாசகம் இங்கு நினைவு கூறற்பாலது.

'மாமுகன்' என்ற சொல் யானை முகத்தையுடைய விநாயகப் பெருமானைக் குறிக்கும். உயிர் வர்க்கங்களுள் யானையை விடப்பெரிய உடம்புடைய உயிர் இல்லை எனலாம். மா என்றால் பெரிய என்று ஒரு பொருள். 'கரி' என்ற சொல்லுக்கு துதிக்கையுடைய யானை என்று ஒரு பொருள். சாட்சி என்று ஒரு பொருள். அகத்தும் புறத்தும் அனைத்தையும் கடந்து திகழ்பவன் அவன். "அணுவுக்கு அணுவாகி அப்பாலுக்கு அப்பாலாய்" என்ற ஔவைப்பிராட்டியின் அருள்வாக்கு இதனை நன்கு உணர்த்தும்.

சூக்குமத்துட் சூக்குமமாக விளங்கும் அவனே அநேக ஆயிரங்கோடி அண்டங்களும் நின்று இயங்கும் அகண்டாகாரப் பெருவெளிக்கும் அப்பாலும் விரிந்து விளங்குகின்றான். அதோடு மட்டுமின்றி அனைத்துக்கும் சாட்சியாகவும் திகழ்கின்றான். அவனுக்குத் தெரியாமல், யாரும் எதுவும் எண்ணவோ, சொல்லவோ, செய்யவோ இயலாது.

இக்கருத்தை விளக்கும் கதை ஒன்றுண்டு ஒரு தந்தை தன் மகனைத் தூரத்தே உள்ள ஒரு குரு குலத்தில் கல்வி பயில ஏற்பாடு செய்திருந்தான். ஒரு நாள் அவனைக் காணச் சென்றிருந்தான். அவனுடன் பேசி முடித்த பின் அவனிடம் ஒரு கனியைத் தந்து, யாருக்கும் தெரியாமல் இதனை நீ அருந்த வேண்டும் என்று கூறிச் சென்றான்.

குருவினிடம் வெகு நேரம் உரையாடினான். மாணவர்களிடம் உரையாடினான். நூல் நிலையம் சென்றமர்ந்து, சில நூல்களைப் படித்தான் குருகுலத்திற்குரிய இடங்களைச்சுற்றிப் பார்த்தான். இப்படியாகப் பொழுது முழுதும் கழித்து மாலையில் மீண்டும் தன் மகனைச் சந்தித்தான். 'கனியை அருந்தினாயா? சுவையாக இருந்ததா? என்று வினவினான். இன்னும் அருந்தவில்லை; அப்படியே வைத்திருக்கிறேன்' என்றான் மகன். ஏன்? என்றான் தந்தை யாருக்கும் தெரியாமல் அருந்தச் சொன்னீர்கள்? அப்படி அருந்த என்றால் இயலவில்லை என்றான் மகன். இவ்வளவு பெரிய குருகுலத்தில் ஒரு கனியை அருந்த உனக்குத் தனி இடம் கிடைக்கவில்லையா என்றான் தந்தை. 'அப்பா! எல்லா இடத்திலும் இறைவன் நிறைந்திருக்கிறானே. அனைத்துக்கும் சாட்சியாக அவன் திகழும் போது, யாருக்கும் தெரியாமல் நான் எப்படிக் கனியை அருந்த இயலும்? என்றான் மகன். மகன் பெற்றுள்ள மேலான அறிவை உணர்ந்த தந்தை மகிழ்ந்தான் என்பது கதை.

ஆதலால் பெரிதினும் பெரிதாய்ச் சிறிதும் சிறிதாய் அனைத்துளும் நிறைந்ததாய், அனைத்துக்கும் சாட்சியாய், அனைத்தையும் இயக்குவதாய் விளங்கும் மெய்ப்பொருளே இறைவன். அனைத்தையும் கடந்தவன்; அனைத்துளும் நிறைந்தவன்; அனைத்தையும் இயக்குபவன் இறைவன். அதனால் அவனைக் கடவுள் என்ற சொல்லால் குறித்தனர் ஆன்றோர். அவனுடைய பேரருளியல்பினை மனத்தால் நினைக்கவோ சொல்லால் உரைக்கவோ எவர்க்கும் இயலாது. இக்கருத்தை விளக்குவதே 'உலகெலாம் உணர்ந்தோதற்கு அரியவன்' என்னும் சேக்கிழார் பெருமான் திருவாக்காகும். அவ்வருள் மொழியே அம்பலக்கூத்தனின் அருள் வாக்கும் ஆகும் என்பதை நாம் உணர வேண்டும்.

ஆனந்த நடனமிடும் இறைவன் திருவடியைத் துதிக்க வேண்டியது உயிர்களின் கடமையாதலால் 'துதித்திடு' என்று ஆண்டவர் நமக்குக் கட்டளையிடுகிறுர். இருள் மயமான இரு வினைச்சுழலுக்குள் சிக்கித் தவிக்கும் நாம் இறைவன் திருவடியைத் துதித்தால் இருவினைமயமான இருளினின்றும் விடுபடலாம்.

இருள்சேர் இருவினையும் சேரா; இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' என்பது திருக்குறள். இறைவனின் மெய்ம்மை சேர்ந்த புகழே 'பொருள்சேர் புகழ்' என்றும், 'புரிதல்' என்பது இடை விடாது சொல்லுதல் என்றும் உரையாசிரியர் விளக்குகிறுர். இறைவனின் திருவடிப் புகழை இடைவிடாது சிந்தித்தலும் துதித்தலுமே உயிர்கள் செய்ய வேண்டிய தலையாய கடமை என்பதை உணர்த்தவே துதித்திடு என்று சுவாமிகள் உணர்த்துகிறுர். 'பாடும் பணியே பணியா அருள்வாய்' என்ற அருணகிரிநாதர் திருவாக்கும் இங்கு சிந்தித்தற்கு உரியது.

**42. நிழல்போல் அதனிடை அன்பு மிகுத்திடில்**
**நெடுமால் அயனெடும் உம்பர்கள் மெச்சுவர்**

இறைவன் திருவடிக்கண் அன்பு பெருக வேண்டும், நீங்காது தொடரும் நிழல் போல இறைவன் திருவடிக்கண் அன்பு பெருகி வளர வேண்டும். ஆசை குறையக்குறைய அன்பு வளரும். ஆசை அனைத்தும் தனக்கெனக்கருதும். அன்பு தன்னையும் பிறர்க்குக்கொடுக்கும். 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு'' என்பார் நாயனுர்.

ஆசை குறையக்குறைய, அன்புபெருகப்பெருக, அருள் தன்மை வளரும் அருளென்னும் அன்பீன் குழவி என்னும் பொய்யாமொழி இக்கருத்தை இனிது விளக்கும். அருள் நலம் வளரும் அளவிற்கு இறை நலம் ஓங்கும். இறைவனின் அருள் நலம் ஓங்கித்திகழ்வதறிந்து திருமாலும் பிரமனும் தேவர் குழாமும் மெச்சிப்புகழ்வார்கள். இறைநலம் பழுத்த அடியார்கள் வானுலகில் வாழும் தேவர்களும் எய்தற் கியலாத திருவருட்பேறு வாய்க்கப்பெற்று விளங்குவர். இறவாப் பெருநிலையும், அருளமுதப்பேறும் எய்தப்பெற்று இன்பமயமாய் இலங்குவர்.

படைக்கும் ஆற்றலும், காக்கும் ஆற்றலும் அவர்கள் பால் அமைந்து பொலியும். நான்முகன் முதலா வானவர் தொழுதெழத் திருவிக்கிரமனுகி, ஈரடியாலே மூவுலகளந்த நெடியோன் என்பதை விளக்க நெடுமால் என்று குறிப்பிடுகிருர். அவ்வளவு நீண்ட பேருரு எடுத்த திருமாலும் மெச்சும்படி மிக உயர்ந்த பெருநிலை அன்பிற்கனிந்த அடியவர்க்கு வாய்க்கும் என்பது இதனுல் விளங்கும்.

ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலையும் ஆற்றவல்ல பேராற்றல் அன்பிற் சிறந்து அருளிற் கனிந்த அடியார்களுக்கு வாய்க்கும் என்ற பேருண்மை

"சிருட்டிமுதல் ஐந்தொழிலும்
செய்ய எனக்கருள் புரிந்தாய்
பொருட்டிகழ்நின் பெருங்கருணைப்
புனிதவமு(து) உவந்தளித்தாய்
தெருட்டிகழ் நின்னடியவர் தம்
திருச்சபையின் நடுவிருத்தித்
தெருட்டியெனை வளர்க்கின்ருய்
சிற்சபையில் நடிக்கின்ருய்"

என்ற இராமலிங்க சுவாமிகளின் திருவாக்கால் உணரலாம் இத்தகைய உயர்கருத்துக்களை விளக்கவே நம் குருபரனுர் 'நெடுமால் அயனெடும் உம்பர்கள் மெச்சுவர்,' என அருளியுள்ளார் என்று கொள்ளலாம்.

இறைவன் திருவருளால் தம்முள் தாம் கண்ட அருட் காட்சிகளை எண்ணி எண்ணி நெக்குருகி அக்காட்சிகளிலேயே மனம் தோய வேண்டும். எண்ணம் நிலைக்க வேண்டும். அணுமாத்திரமும், அவ்வின்பக் காட்சிகளை விட்டு விலகுதல் கூடாது என்ற கருத்தினை வலியுறுத்தவே சுவாமிகள் "நிழல் போல் அதனிடை அன்பு மிகுத்திடில்" என்று அருளுகின்ருர். இத்தகைய உயர்நிலை பெற்ற ஞானிகள் இவ்வுலகில் வாழ்பவராஞலும், பற்றின்றி இருப்பர். "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே" என்ற வாக்கு இதை உணர்த்தும். இவர்கள் எண்ணுவது நடக்கும்; இயற்கை இவர்களுக்கு அடிபணியும்.

43 மும்மலங்களைப் போக்கு—பிராரத்வகன்மம்
முழுதும் புசித்து நீக்கு
நின்மலன் அடிதாக்கு—நிஷ்களங்கமாய்
நிஷ்டானுபூதி நோக்கு

ஆணவம் கர்மம் மாயை என்னும் மும்மலங்களைப் போக்க வேண்டும். பதியாகிய இறைவனை எய்தவொட்டாமல் தடுப்பது உயிரைப் பற்றியுள்ள பாசம் ஆகும், அது மூன்று வகைப்படும். உண்மையை உணர இயலாதபடி, நிலையில்லாப் பொருளை நிலையான பொருள் எனக் காட்டி மயங்க வைப்பது மாயை. நான் என்னும் முனைப்பிற்கு ஆளாக்குவது ஆணவம். நாம் பிறவிதோறும் செய்து வரும் செயல்களின் பயனைத் தொடர்ந்து வருவது கர்மம்.

இது மூவகைப்படும் பழவினை அல்லது முன்வினை (சஞ்சிதம்), வருவினை அல்லது புதுவினை (ஆகாமியம்) ஆகிய இரண்டும் நம்மை அணுக வொட்டாமல் குரு அருள் தடுத்து விடுகிறது. ஆனால் உடம்பெடுத்துவந்த பிராரத்வ வினையை மட்டும் அனுபவித்தே நீக்க வேண்டும். அதனால்தான் சுவாமிகள் 'பிராரத்வகன்மம் முழுதும் புசித்து நீக்கு' என்று அருளியுள்ளார்கள்.

இவ்வாறு அனுபவிக்க வேண்டியதற்கும் குருவருள் துணைநின்று, அதன் வலிமையைக் குறைத்து, சுலபமாக அனுபவித்து நீக்கும்படி துணைபுரிகிறது என்று அருளனுபவம் மிகுந்த ஆன்றோர் அருளுகின்றனர்.

எல்லா உயிரும் பெற வேண்டிய பெரும் பேறு இறைவனின் திருவடிப் பேருகும். இறைவன் நம்முள் எழுந்தருளியுள்ளான்.

'உன்னைப் படைத்தவன் ஆரு—உனக்
குள்ளே இருக்கிறான் பாரு'

என்பது நம் குருபரனர் அருள்வாக்கு. அவனைக் காண வேண்டும். அவனைத் தொட்டு இன்புற வேண்டும். அவன் திருவடிகளிற் கலந்து முத்தி பெற வேண்டும்.

உயிர் மும்மலம் என்னும் பாசசம்பந்தம் உடையது. இறைவன் பாசமற்ற நின்மலனாக விளங்குகின்றான். பாசம்

அவனைச் சார இயலாது, அவன் திருவடிகளைப் பற்றிக் கொண்டால் நாம் பற்றிலிருந்து விடுபட முடியும்.

நாம் பற்றிலிருந்து விடுபட, பற்றற்றவனாகிய இறைவனைப்பற்ற வேண்டும் என்பது திருக்குறள். நாம் இறைவன் திருவடியை உண்மையன்புடன் பற்றப் பற்ற நம் முன் உள்ள களங்கம் விலகுகிறது. களங்கம் விலகும் அளவிற்கு நாம் நிஷ்டைநிலையில் உயர்வுறுவோம். பழுத்த அனுபவம் சிறந்த அனுபூதி நமக்கு வாய்க்கிறது. அத்தகைய உயர் நிலையில் நாம் நாட்டமுற்றிருக்க வேண்டும் என்று குருநாதர் அருளுகிறார்.

**44. கனகசபைதனில் அமரர் முனிவர்கள்**
**ரிஷிகள் பலரொடு தொழுது வருமுறை**
**கண்டபடி நீயிருந்து காணடி—யார்க்கும்**
**விண்டு சொல்லக் கூடாதென்று பூணடி.**

நிட்டையில் உயர்ந்த நிலைக்குச் செல்லச் செல்ல, இறைவன் திருவருளால் சிறந்த பல அருட் காட்சிகள் தோன்றும். மனத்தில் உள்ள பாசம் நீங்க நீங்க, அருளொளிபெருகும். அப்போது நம்முள் இறைவன் எழுந்தருளியுள்ள கனகசபை தோன்றும். தேவர் குழாமும், முனிவர் குழாமும், ரிஷிகள் குழாமும், தொழுது வர இறைவன் தோன்றி அருட் காட்சி தருவான். பல சிறந்த ஞானியர்கள், அருளாளர்கள் இத்திருக் காட்சியைக் கண்டுள்ளார்கள். அவ்வாறு ஆன்றோர் பலர் கண்டுள்ளபடி நீயும் காண வேண்டுமென்று தலைவி தன் தோழிக்குச் சொல்வது போலவும், குருநாதர் தம் உள்ளத்திற்குச் சொல்வது போலவும் நமக்கெல்லாம் உணர்த்துகின்றார்.

இருந்து காண வேண்டும் என்பது நிட்டையில் இருந்து காண வேண்டும் என்பதைக் குறிக்கும். அவ்வாறு பூர்வ புண்ணியப்பயனால், இறைவனின் திருவருள் துணையால் காணும் அருட்பெருங் காட்சியைப் பற்றி யாரிடமும் எக்காரணம் கொண்டும் அணுவளவும் வெளியிட்டுக் கூறலாகாது. அவ்வாறு சொல்வதால் அகந்தை மிகுந்து மேல் நிலைக்குச் செல்ல முடியாமற் போய் விடும். அதனால் தான் சட்ட

அனுபவம் ரகசியம் என்று கூறி, இறைவனுக்கும் நமக்கும் உள்ள உறவைப் பற்றியும், அவனருளால் நாம் அனுபவிக்கும் பேரின்ப நிலைகளைப் பற்றியும் எண்ணி இறுமாப்புறுவதோ, பிறரிடம் பெருமையாக எடுத்தியம்புவதோ கூடாது. அடக்கத்துடன் உளத்துட் கொண்டு, உன்னி உன்னி உருகி உருகி இன்புற வேண்டும் என்பது குருபெருமானின் அருளாணையாகும்.

பேரருளாளர் பலர் புறத்திலும் அவன் அருட்காட்சி கண்டுள்ளதாக வரலாறுகள் கூறுகின்றன. அவர்கள் பாடி உள்ள அருட்பாடல்களும் சான்றாய் அமைந்துள்ளன,

"கருணை அடியரோ டருணையில் ஒருவிசை
சுருதி புடைதர வருமிரு மரிபுர
கமலமலரடி கனவிலும் நனவிலும்—மறவேனே"

என்ற அருணகிரிநாதர் திருப்புகழும், மற்றும் பல சான்றோரின் அருள் வாக்குகளும் இவ்வுண்மையை விளக்குகின்றன.

நம் குருபெருமானும் பரிபூர்ணப் பெருமானை அகத்தே தரிசித்து அருள் பெற்றதன்றி, புறத்தேயும் மதுரை மாநகரில் வைகையாற்றின் தென்கரையில் ஜோதி வடிவிலும், அந்த ஜோதியின் நடுவில் பிரணவ சொரூபமாகிய விநாயகப் பெருமான் வடிவிலும் தரிசித்துப் பேரருள் பெற்றுள்ளார் என்ற வரலாறும் நாம் உளம் கொண்டு போற்ற வேண்டும்.

**45. இகபரநற் கதியேதரு குருபரன் நிர்த்தனமாடிடும்**
**ஏகசிம் மாசனத் தோடு—நிலை**
**யாகும் துறை கண்டு கூடு.**

இம்மையில் நல்வாழ்வருளி, பரகதியாகிய மோட்ச வீட்டையும் தந்து பேண எல்லாம் வல்ல இறைவன் குருமூர்த்தியாக எழுந்தருளுகின்றான்; குருவருள் இன்றி முத்தி பெற இயலாது என்பது ஆன்றோர் துணிவு. இறைவன் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் குருவாக எழுந்தருளி மாணிக்கவாசகரை ஆட்கொண்டு அருள் புரிந்ததையும், மதுரை மாநகரில் வைகையின் தென்கரையில் பரிபூர்ணப் பெருமானாக எழுந்தருளி நம் குருபரனாரை ஆட்கொண்டு அருள்புரிந்ததையும் உன்னிப் பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். இறைவனே குருநாதன்; குருநாதனே இறைவன்

என்ற முடிவான எண்ணம் எப்போதும் நம் உள்ளத்தில் நிலைத்திருக்க வேண்டும்.

நிட்டையில் தோய்ந்து முன்னேற்ற மெய்தும்போது எல்லாம் வல்ல இறைவன் நம் இதயத் தாமரையில் எழுந்தருளி அருள் நடனம் புரிந்து, நம்மை இனிது இயக்கும் அற்புதக் காட்சியைக் கண்டு இன்புற இயலும். மேலும் உயர்நிலை எய்துகையில், பரிபூர்ணப் பெருமானாகிய பரம்பொருள் பல்லாயிரங்கோடி அண்டங்களையும் மிக மிக அற்புதமாக இயக்கி அருளாட்சி புரியும் மாபெருஞ் சிறப்பைக் காணலாம் சர்வலோகச் சக்ரவர்த்தியாக விளங்கும் இறைவன் மெய்ஞ்ஞான குருமூர்த்தியாக எழுந்தருளி அருளரசாட்சி புரியும் சிம்மாசனம் ஒப்புயர்வற்ற ஏக சிம்மாசனமாகும். அரும்பெரும் தவத்தின் விளைவால் நாம் அதனைக் காண இயலும். நாம் இறவாப் பெருநிலை எய்த வேண்டுமானால், அதனோடு இணைதல் வேண்டும். அதற்கேற்ற மேலான துறையில் பாடுபட வேண்டும் என்று அருள்கிறார் சுவாமிகள்.

அம்மேலான துறையே நம் குருபெருமான் அருளியுள்ள அருட்சட்டநெறியாகும். அத்தூய நெறியில் அணுவளவும் தவறாது உண்மையான பேரன்புடன் அருள் வாழ்வாற்றினால் இவ்வுயர் நிலையடைய இயலும் என்பது சுவாமிகளின் திருவுள்ளமாகும்.

## இறைவன் அடியார்க்கு எளியவன்

### 46, அடியார்க்(கு) எளியவண்டி

நாம் ஒரு அரசாங்க அலுவலரைக் காண வேண்டுமென்றால், பெருஞ்செல்வர் ஒருவரைக் காண வேண்டுமென்றால், எளிதிற் காண இயல்வதில்லை. எல்லாம் வல்ல இறைவன் பல்லாயிரங் கோடி அண்டங்களையும் படைத்தளித்து அருளாட்சி புரியும் பேராற்றல் உடையவன். எல்லா உலகமும், எல்லாச் செல்வமும் அவனுக்கே உரியன. அவன் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன். எங்கும் நிறைந்தவன். என்றும் உள்ளவன். முற்றும் உணரும் பேரறிவாளன்.

அவனைக் காட்டிலும் வயதிலோ, அறிவிலோ, ஆற்றலிலோ, செல்வத்திலோ, செல்வாக்கிலோ மற்றெந்த வகையாலோ உயர்ந்தவர்களும், அவனுக்குச் சமமான வர்களும் வேறெவரும் இல்லை. இதுவரையும் இல்லை. இப்போதும் இல்லை. இனிமேலும் இருக்க முடியாது. இது முக்காலும் உண்மை, இப்படிப்பட்ட மாபெருஞ் சிறப்புகளை யுடைய இறைவனுடன் தொடர்பு கொள்வது எளிதான காரியமா? என்ற ஐயம் அன்பர்கள் உள்ளத்தில் எழலாம் அல்லவா? அதற்கு நம் குருபெருமான் விடையருள்கிறார்.

அமரர்கட்கும் அரியவனாக விளங்கும் இறைவன் ஆற்றல் மிகப் படைத்தவன் ஆயினும், கருணைமிக உடைய வனாகத் திகழ்கிறான். தன்னை வழிபடும் அடியவர்கட்கு மிக மிக எளியவனாக விளங்குகின்றான்.

"வான நாடரும் அறியொணாதநீ
மறையில் ஈறுமுன் தொடரொணாதநீ
ஏனை நாடரும் தெரியொணாதநீ
என்னை யின்னிதாய் ஆண்டுகொண்டவா"

என்றும்,

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையாய் ஆண்ட ஈசனே"

என்றும் பாடியருளும் மணிவாசகப் பெருமானின் திருவாசகம் இவ்வுண்மையை விளக்குகிறது.

நாள்தோறும் சந்நிதியிற் பாடித் துதிக்கும் பாணனுக் காகச் சொக்கநாதர் விறகு விற்ற திருவிளையாடல் புரிந்ததும். பக்தியிற் சிறந்த செம்மனச் செல்விக்காக மண் சுமந்த திருவிளையாடல் புரிந்ததும் இறைவன் அடியார்க்கு எளியவன் என்பதைத் தெளிவுறுத்துகின்றன.

இறைவனின் எளிவரும் தன்மையை 'சௌலப்பியம்' என வைணவ சமயம் போற்றுகின்றது.

## இறைவன் அருள் புரிந்தமை

47. நினைப்பினில் மறக்குமோ நீ செய்த நன்றி

இறைவனின் இருப்பைப் பற்றியோ, அவனுடைய மாபெருங் கருணையைப் பற்றியோ, அவன் நமக்குப் புரிந்துள்ள, புரிந்து வரும் நன்மைகளைப் பற்றியோ, நாம் சரியாகப் புரிந்துகொள்ள இயலவில்லை. அருளாளர்கள், மெய்ஞ்ஞானிகள் தம் அருளனுபவத்தால் உணர்ந்தார்கள். உணர்வுக்கும் எட்ட முடியாத அவனது பேராற்றலையும், கருணைத் திறத்தையும், உன்னி உன்னி, உருகி உருகி, உள்ளம் கனிந்து போற்றியுள்ளார்கள்.

வாழையடி வாழையாக வந்துள்ள அருட் பெரியார்களின் வரலாறுகளையும், அனுபவங்களையும், அவர்கள் பாடிப் போற்றியுள்ள தோத்திர நூல்களையும் உண்மையன்புடன் பார்த்தால், உருகாத கல் மனமும் உருகிவிடும்,

நம் குருபரனும் இறைவனைப் பற்றிக் கூறியுள்ள, அனுபவித்துள்ள, உளத்துட் கொண்டு போற்றியுள்ள அருட் செய்திகளை உள்ளபடி உணர்ந்தால், அடியார்களின் உள்ளம் எப்படிக் கசிந்துருகும் என்பதை அனுபவத்தில் தான் உணர இயலும்.

நாமும் உலகத்தைக் காண்கிறோம். அவர்களும் கண்டார்கள். நாம் உண்டு உடுத்து வாழ்கின்றோம். அவர்களும் வாழ்ந்தார்கள். ஆனால் நம் வாழ்க்கைக்கும் அவர்களுடைய வாழ்க்கைக்கும் எவ்வளவோ வேறுபாடு உண்டு. நாம் எந்தப் பொருளையும் பற்றுடன் பார்க்கிறோம். அவர்கள் பற்றின்றிப் பார்த்தார்கள். எந்தப் பொருளுள்ளும், எந்த உயிருள்ளும் இறைவன் அருளொளியைக் கண்டார்கள். உருகினார்கள். போற்றினார்கள். தம்மை மறந்தார்கள். பேரின்பத்தில் தோய்ந்தார்கள்.

இறைவன் உயிர்களுக்காகச் செய்துள்ள, செய்து வரும் நன்றியை எண்ணி எண்ணி வியந்து போற்றினார்கள். உயிர்கள் வாழ்வதற்காக இறைவனால் தரப் பெற்றுள்ள

உடம்பையும், அதன் உட்கூறுகளையும், அவை இயங்கும் தன்மையையும், அவை புரியும் செயல்களையும் கூர்ந்து நோக்கினுல், இறைவன் நமக்குப் புரிந்துள்ள நன்றியை உணர முடியும்.

உயிர்கள் வாழ்வாற்றுதற்காக இறைவனுல் படைக்கப் பெற்றுள்ள உலகின் அமைப்பையும், அதில் திகழும் கடல், மலை, சூரியன், சந்திரன், விண்மீன்கள், காற்று, கனல், நீர், மண், விண் ஆகிய பஞ்ச பூதங்கள், அவற்றின் விளைவுகள், பருவ காலங்கள், அவை புரியும் செயல்கள் இப்படியெல்லாம் எண்ணற்ற வகைகளில், நாம் எண்ணிப் பார்க்க இயலாத அத்துணைச் சிறப்புடன் திகழும் அற்புதங்களைக் கண்டால், கூர்ந்து கவனித்தால், இறைவன் உயிர்கள்பால் கொண்டுள்ள மாபெருங் கருணைத் திறம் விளக்கமாகும்.

சுவாமிகள் அருந்தவம் ஆற்றினுர்கள். ஞான விழி பெற்ருர்கள். கோடிக்கணக்கான தமது முற்பிறவிகளைப் பற்றி உணர்ந்தார்கள். அத்தனையிலும் இறைவன் தமக்குப் புரிந்த கருணையின் சிறப்பினை அருள் நோக்கால் உணர்ந்தார்கள். இப்பிறவியிலும் தம்மைத் தவத்தில் உயர்த்தி, அருட்பெரு நிலைகளை அருளி, அனைத்துயிர்க்கும் அருள்நெறி தந்து அல்லல் களைந்து ஆனந்தம் ஊட்டுவிக்கும் பேராற்றலை அருளி, அருளாட்சி புரியச் செய்த பரிபூரணப் பெருமானின் மாபெருங் கருணைத் திறத்தை உன்னி உன்னி, உருகி உருகி, ‘நினைப்பினில் மறக்குமோ நீ செய்த நன்றி’ என்று போற்றுகிருர்கள்.

அருள்நெறி செல்லும் அடியார்கள், இறைவன் நம் வாழ்விற்காக உலகினைப் படைத்து, உடம்பினைக் கொடுத்து உள்ளும் புறமும் கலந்திருந்து பேணியருளும் பேருதவியையும், நம்மைக் கடைத்தேற்றும் பொருட்டு அருட்குரு மூர்த்தியாய் எழுந்தருளி, அருட்சட்டம் வழங்கி, அரும் பெருந் துணையாய் அமைந்து, அருள் வாழ்வில் ஊக்குவித்துப் பேரருள் புரிந்து புரந்து வரும் சிறப்பையும் உளமார உன்னினுல், ‘நினைப்பினில் மறக்குமோ நீ செய்த நன்றி’ என உருகி உருகிப் போற்ற வேண்டியவர்களாயுள்ளோம்.

**48. கறந்து கறந்(து) ஆவின்றன்**
**கன்றுக்குப் பாலூட்டும் கதையைப் போலச்**
**சிறந்தெனை நீ வளர்த்துவிட்டாய்**

இறைவன் நமக்கு உடம்பைக் கொடுத்துப் பொறி புலன்களைக் கொடுத்து, ஒவ்வோர் அணுவிலும் உடன் கலந்திருந்து ஊக்கி, இயக்கிப் பேணி வருகிறார். அகமும் புறமும் ஒப்பற்ற துணையாயிருந்து வளர்த்து வருகிறார்.

மற்றும் ஒரு சிறப்பு என்னவென்றால், ஒரு குழந்தை பிறக்கு முன்பே அதற்கு வேண்டிய உணவை (பாலை) தாயிடத்தில் உண்டாக்கி வைக்கிறார். உயிர் வாழ்வதற்காக உலகமும், அதற்கு வேண்டிய காற்று, சூரியவொளி, உணவுப் பொருள், மற்றும் தேவையான பொருள்கள் அனைத்தையும் முன்னரே உண்டாக்கி வைத்துள்ளார். அவருடைய மாபெரும் கருணைக்கு ஈடு இணை ஏதும் சொல்ல இயலாது.

ஆயினும் ஓரளவு விளக்குவதற்கு ஒரு உபமானம் சொல்கிறார் சுவாமிகள். உலகத்தில் தாயன்புக்கு ஈடாக வேறு எதையும் சொல்ல இயலாது. அதிலும் தாய்ப் பசுவுக்குக் கன்றினிடத்துள்ள பேரன்பு மிகமிக மேம்பப்பட்டதாகும். கன்றினிடத்து வேறொருவர் சென்றாலும், கன்றுக்கு என்ன தீங்கு செய்து விடுவார்களோ என்ற எண்ணத்தால், உடனே சினத்துடன் விரட்டிவிடுவதைக் காண்கிறோம்.

கன்றைக் கண்டவுடன் தாய்ப்பசுவுக்குப் பால் சுரக்கும். கன்றை நல்ல முறையில் பேணி வளர்க்க வேண்டுமே என்ற எண்ணம் தாய்ப்பசுவுக்கு மிகமிக உண்டு. பசுவையும் கன்றையும் தனித் தனியாகப் பிரித்துக் கட்டி வைத்துவிட்டாலும், கன்று பசியுடன் இருப்பதைக் காணச் சகிக்காத தாய்ப் பசு தும்பை அறுத்துக் கொண்டு, கன்றுள்ள இடத்தில் ஓடிச் சென்று, கன்றுக்குப் பாலூட்டிவிடும், என்னே அந்தப் பசுவின் பேரன்பு. இதை விடச் சிறந்த உதாரணம் உலகத்தில் வேறு கூற இயலாது. ஆகையால் சுவாமிகள் இவ்வுதாரணத்தைக் கூறியுள்ளார்கள்.

கறந்து என்ற சொல் 'பால் சுரந்து' என்ற பொருளில் அமைந்துள்ளது.

இறைவன் தம்மிடத்து ஓம்புயர்வற்ற மாபெருங் கருணை கொண்டு மிகமிக அற்புதமாகப் பேணி வளர்த்த சிறப்பை உன்னி உன்னிப் போற்றுகிறார். இத்தகைய கருணை வடிவினனான இறைவனைத் தவிர, வேறு எந்த சிந்தையும் இல்லாதவராய் இலங்குகிறார்.

நாமும் அவ்வாறு வேறெந்த சிந்தனையும் இன்றி இறைவனையும் அவனது மாபெருங் கருணைத் திறத்தினையும் சிந்தித்துச் சிந்தித்துச் செம்மையுறுவோமாக.

**49. யானெனத தென்னும் செருக்கறுக்கத் தெய்வம்**
**மானிட மாகவே வந்த(து) அதிசயம்**

**பி**றவியே ஒரு பெரும்பிணி என்பது ஆன்றோர் கருத்து. பிறவிப் பிணிக்காளாகியுள்ள நாம் அப்பிணியை நீக்கிக் கொள்ள வழி தேட வேண்டும். அனுபவம் மிக்க அருளாளர்கள் அதற்கேற்ற வழியை விளக்கியுள்ளார்கள். பிறவிக்கு வினை காரணம். வினைக்கு ஆசை காரணம். ஆசைக்கு யான் எனது என்ற எண்ணம் காரணம். இதனைப் பெரியோர் அகப்பற்று, புறப்பற்று எனக் கூறுகின்றார்கள். பிறவிக்கு மூல காரணமாகிய யான், எனது என்ற இருவகைப்பற்றும் அற்று விட்டால் பேரின்பமாகிய முத்திநிலை வாய்த்துவிடும்.

"யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்(கு)
உயர்ந்த உலகம் புகும்"

என்பது திருக்குறள். 'யான் எனது என்று அற்ற இடமே திருவடி' என்பார் குமர குருபரர். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பது நம்மாழ்வார் திருமொழி.

தான் அல்லாத உடம்பை 'யான்' என்றும், தன்னோடு இயைபு இல்லாத பொருளை 'எனது' என்றும் கருதி அவற்றின் கண் பற்றுச் செய்வதற்கு ஏதுவாகிய மயக்கத்தைக் கெடுப்பான் வானோர்க்கும் எய்தற்கு அரிய வீட்டுலகத்தை எய்துவான்; என்பது திருக்குறள் உரையாசிரியர் கருத்து.

குருநாதர்பால் பெற்ற உபதேசத்தாலும், அருள்நெறி பயிற்சியாலும், தவ நிட்டையின் மேன்மையாலும் உடம்பின் கண்ணும், உலகப் பொருள்களின் கண்ணும் உள்ளபற்று அடியோடு நீங்க வேண்டும்.

இச்செயலைச் செயல் முறையில் பூர்ணமாய் நிறைவேற்றும் பொருட்டு, பரிபூர்ணப்பெருமான் ஜோதி வடிவில் திருக்காட்சி அளித்ததோடு, பின்னர் பல முறை மானிட வடிவிலும் குருவாகத் தோன்றி அருள்புரிந்துள்ளார் என சுவாமிகள் கூறி அருள்கிறார்.

இறைவன் தம்மை ஆட்கொண்டு அருள் புரிந்த செயல்களைத் தெரிவிக்கும் வகையில் பாடியுள்ள "ஆதிபராபரமே அடிமையை ஆட்கொண்ட சூக்ஷ்மமடி" என்ற அருட்பாடலில் இச்செய்தியை அருளியுள்ளார்.

நம்முடைய அகங்கார மமகாரங்களை நீக்கிப் பேரின்ப முத்தி அருள்வதற்காக எல்லாம் வல்ல இறைவன் நம் குருநாதராக மானிட வடிவில் எழுந்தருளிய அதிசயத்தை அற்புதத்தை நினைக்கவோ, சொல்லவோ நம்முடைய மனத்திற்கும் வாக்கிற்கும் சக்தியில்லை. உன்னி உன்னி, உருகி உருகிப் போற்றி அருட்பயன் பெற வேண்டும் என்பது உணரத்தக்கதாகும்.

### 50. மோகப்படும்அடி யேனுக்கு அருள்செய்த மூலக்கனிருசி யார்செப் பிடவலர்?

**மோகம்** என்ற சொல்லுக்கு ஆசை என்று ஒரு பொருள்; உன்மத்தம் என்று ஒரு பொருள். மூலப் பொருளாகிய இறைவன் எனும் திருவருட்கனியை அருந்த வேண்டும் என ஆசைப்பட்டேன். அந்த விருப்பம் மிக மிக மேலோங்கிய போது பித்துப் பிடித்த நிலையடைந்து விட்டேன். தெய்வப் பித்து முற்றி விட்டதென உலகோர் பழித்துக் கூறினர்.

அத்தகைய மாபெரும் வேட்கை உடைய அடியேனுக்கு இறைவன் அருள் புரிந்தான். மூலக்கனியாகிய தெய்வக் கனியை, அருட்பெருங்கனியை, மெய்ஞ் ஞானக்கனியைச் சுவைக்கச் செய்தான்; அருந்தச் செய்தான் பேரின்பமயமாக்கினன். அவ்வருட் பெருங்கனியின் ஒப்புயர் வற்ற தனிப்பெருஞ் சுவையை யாரால் கூறஇயலும்? எண்ணவும் இயம்பவும் இயலாத பேரின்பச் சுவையை உடையதன்றோ அக்கனி?

"அடியேன் விரும்பிய வண்ணம் இறைவன் அருள் புரிந்தான்; சொல்லால் அளப்பரிய நறுஞ்சுவைக் கனியாம் இறைவனின் பெருங்கருணைச் சுவையை அனுபவித்தேன்" என நன்றியுணர்வோடும் கூறியருள்கிறார் சுவாமிகள்.

களங்கமற்ற மனத்துடன் அடியவர் விரும்பும் தூய விருப்பங்களை இறைவன் நிறைவேற்றி அருள்கிறான் என்பது அருளாளர் பலரும் ஒப்புக் கொள்ளும் பேருண்மையாகும்.

"வேண்டுவார் வேண்டுவதே ஈவான்கண்டாய்"
—அப்பர் சுவாமிகள் தேவாரம்

"வேண்டுநர் வேண்டியாங்(கு) எய்தினர் வழிபட"
—திருமுருகாற்றுப் படை

"எவ்வண்ணம் வேண்டுகினும் அவ்வண்ணம் அன்றே
இரங்கியீந் தருளும் பதம்"
—திருவருட்பா.

நாமும் உண்மையன்புடன் இறைவனை வேண்டினால், தன்னேரில்லாத் தனிப்பெருஞ் சுவை மிக்க திருவருட் கனியைச் சுவைக்க முடியும் என்பதை சுவாமிகள் உணர்த்தியருள்கிறார் என்றும் கொள்ள வேண்டும்.

## 51. மெய்ஞ்ஞானந்தனை அடைய விரும்பி அதேநெறி நின்ற(து)உன்—அருளாகும்

உண்மை ஞானத்தை அடைய வேண்டும் என்ற மனப் பூர்வமான விருப்பம் முதலில் உண்டாக வேண்டும். சுவாமிகளுக்கு அவ்விருப்பம் பூர்ணமாக உண்டாகும்படி இறைவன் அருள் புரிந்தான்.

விருப்பம் உண்டானால் மட்டும் போதாது. அதற் கேற்ற தூயநெறியைக் கைக்கொண்டு பேண வேண்டும். இடையில் அணுவளவும் பிறழாது பரிபூர்ணமான நம்பிக்கை யுடன், திடமான வைராக்கியத்துடன், அந்நெறியில் நிலைத்து நின்று, முன்னேற வேண்டும். அப்போதுதான் பயனடைய இயலும். அவ்வாறு தளராத பேருறுதியுடன், அருள்நெறியில் நிலைத்து நின்று முன்னேறவும்இறைவனின் மாபெருங்கருணை துணைபுரிய வேண்டும்.

உண்மை ஞானம் எய்த வேண்டும் என விரும்பச் செய்ததும், அதற்கேற்ற அருள் நெறியைப் பேணச் செய்ததும், அந்நெறியில் நிலைத்து நின்று முன்னேறச் செய்ததும் உன் திருவருளே யாகும் என, இறைவன் பால் கொண்ட பேரன்பால் நன்றியுணர்வுடன் சுவாமிகள் கூறி அருள்கிறார்.

நாம் அருள்நிலையில், அருட்சட்டச் செந்நெறியில் நிலைத்து நின்றாலும், அணுவளவு முன்னேற்ற முற்றாலும், அதற்கு இறைவனின் [குருபெருமானின்] தனிப்பெருங் கருணையே காரணம் என்னும் உண்மையை உணர்ந்து, நன்றி விசுவாசத்துடன் வாழ்வாற்ற வேண்டும் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### 52. என்னைத் தடுத்(து) எம் இறைவன் பணிகொள்ளத் தன்னைக் கொடுத்த(து) அதிசயம் என் சொல்வேன்

மூன்னேன் ஆகிய பரிபூர்ணப் பெருமான் தம்மை எவ்வாறெல்லாம் ஆட்கொண்டு அருள் புரிந்தார் என்பதை சுவாமிகள் "ஆதிபராபரமே—அடிமையை—ஆட்கொண்ட சூக்ஷ்மமடி" என்று தொடங்கும் தம் அருட்பாடலில் சுருக்க மாகவும் விளக்கமாகவும் மிக அற்புதமான முறையில் அருளி யுள்ளார்கள்.

அப்பாடலின் கடைசி அடியே இதுவாகும்.

எல்லா உயிரும் இம்மையில் நல்வாழ்வு வாழ வேண்டும்; பேரின்பமுத்தி பெற்றுய்ய வேண்டும்; அதற்கேற்ற அருள் நெறியை எளிய முறையில் வகுத்து வழங்கித் துணை புரிய வேண்டும் என்பது சுவாமிகளின் குறிக்கோள். அதற்கெனவே சுவாமிகள் அவதாரமானார்கள்.

இளமை முதற் கொண்டே தெய்விகப் பொலிவுடன் திகழ்ந்தார்கள். அருள் நாட்டமுடையவராய் விளங்கினார்கள். ஏழைகள் பால் இரக்கம் மிகுந்தவராய் இலங்கினார்கள். அருளாளராகிய இவர் விவசாயம் புரிய நிலத்தில் சென்று திருவடி வைத்துப் பயிர் செய்யத் தொடங்கி யதும், நிலம் ஒன்றுக்குப் பல மடங்காக விளைவளித்தது. அது கண்ட பெற்றோரும் உற்றாரும் 'சுப்ரமண்யம் கைராசி

உடையவன்' எனப் போற்றிப் புகழ்ந்தனர். அப்படியே தொடர்ந்து பெற்ருர் உற்ருருடன் வாழ்வாற்ற இவரை விட்டு வைக்க இறைவனுக்கு விருப்பமில்லை. இவரைத் தடுத்தாட் கொள்ளத் திருவுளம் பற்றினர்.

ஏழை மக்கள் வயிருர உண்டு வாழ இயலாமல் அவதிப் படுவதை இவர் கண்ணுக்குக் காட்டி, இரக்கம் கொள்ளச் செய்து, அவர்களுக்கு உதவி புரியச் செய்து, பெற்ருர் உற்ருர் பலரும் இவர் மீது வெறுப்புற்று 'இது பயனற்ற பிள்ளை' எனக் கூறும் படி செய்து விட்டார்; அது கேட்டு இவர் மனம் தளர்ந்த போது 'இரெட்டியப்பட்டியை விட்டுப் புறப்படு' என்று அருளாணை தந்து மதுரை நகரையடையச் செய்தார்,

எத்தகைய செந்நெறியை உலகுக்கு அருள வேண்டும் எனப் படிப்படியாக உணர்த்தியருளினர். ஜோதி வடிவில் அருட்காட்சி யருளினர். குறை பல நீங்கி நிறை நலம் எய்த விரும்பி வந்த அன்பர்களிடம் தாம் கையாண்டு பயன் பெற்று வரும் செந்நெறியைக் கூறி, பற்றி உய்யச் செய்து அருட்சட்ட நெறிக்குக் கடைக்கால் அமைக்கச் செய்தார்.

பொதிகை மலைக்குகையில் அரும்பெரும் தவம் பேணச் செய்தார். அருள் நிலையில் உயரச் செய்தார். அருட் சித்திகள் பலப் பல எய்தச்செய்தார். செத்தாரை எழுப்பும் திறன் முதலிய அதியற்புதப் பேராற்றல் பலவும் எய்தச் செய்தார். மாபெருந் தவத்தின்கண் தளரா நல்லூக்கம் அருளி, மிக நன்கு பேணச் செய்தார். இறுதியில் தேவர் கூட்டத்துடன் அருட்காட்சி யருளினர், விஸ்வரூப தரிசனம் தந்தார். இறவாப் பெருநிலை அருளினர். பல்லுயிரும் பேரின்ப முத்தி எய்தத் தக்க அருள் நெறியை உலகுக்கு அருள அனுமதி அளித்தார். அருட்சட்ட நெறி பேணும் உயிர்களைக் காத்தருள்வதாக உறுதி மொழி தந்தார்.

அருளரசாட்சி அளித்தார். சுவாமிகளுக்குள் பரிந்து புகுந்தார். அதாவது தம்மையே சுவாமிகட்குக் கொடுத்து விட்டார், அதுமுதல் சுவாமிகள் இறைவன் மயமானர். சுவாமிகளின் செயல்கள் அனைத்தும் இறைவன் செயல் ஆயின. இது மாபெரும் அதிசயம். இந்த அற்புத அதிசயத்தை என்ன சொல் கொண்டு எவ்வாறு இயம்ப முடியும். என்று உருகி வியந்து கூறி யருள்கிருர் சுவாமிகள்.

என்னைத் தடுத்தாட்கொண்ட இறைவன், தன்னையே எனக்குக் கொடுத்துவிட்டான். இது என்னே அதிசயம். இவ் அதிசயத்தை என்னெனச் சொல்வேன் என்று அருளுகின்றார். இதுவே இப்பாடலின் ஈற்றடியாகும். தாம் அருந்தவம் ஆற்றியதன் குறிக்கோள் நிறைவேறி விட்டதால், தாம் புரிய வந்த செயலைப் புரிதற்கு வேண்டிய பேராற்றல் எய்தப் பெற்றதால், பாடலை அதோடு முடித்துவிட்டார் என உணர வேண்டும்.

இதன் கண் நாம் இன்னும் ஒரு பேருண்மையையும் உணர வேண்டியவர்களாயுள்ளோம்.

என்னைத்தடுத்தாட்கொண்டதும், இறுதியில் தன்னை எனக்குக்கொடுத்ததும் ஏன் தெரியுமா? என்று விளக்குகிறார் சுவாமிகள் உலக உயிர்களுக்கு இம்மை நல்வாழ்வையும் பேரின்ப முத்தியையும் அருளத்தக்க எளியதொரு அருள் நெறியை வகுத்து வழங்க வேண்டும் என இறைவன் திருவுளம் பற்றினன். அதற்காக சுவாமிகளை இவ்வுலகுக்கனுப்பி வைத்தான். தன் பணியை நிறைவேற்றிக்கொள்வதற்காக இவ்வதிசயச் செயல்களைச் செய்தான் என்பதைப் 'பணி கொள்ள' என்ற சொல்லால் சுவாமிகள் உணர்த்துகிறார்,

இதனைச்செய்தவர் இறைவன் என்று கூறவந்த சுவாமிகள் எம் இறைவன் என்றார். இறைவன் எல்லா உயிர்க்கும் உரியவன்; எல்லா உயிரையும் அடிமையாக உடையவன் என்பது பொருள். அவன் தன் பணியை நிறைவேற்றிக் கொள்ள இச்செயல் செய்தான் என்று கொள்வதோடு, என்னைப்பணி கொள்ள என்ற பொருளில், என் பணி கொள்ள (என் தொண்டினை ஏற்றுக்கொள்ள) என்று பொருள் படுவதையும் உணர வேண்டும். அருட்சட்டம் உலகெங்கும் பரவ வேண்டும் என்பது இறைவன் திருவுளம் ஆதலின், அருட்சட்ட அடியார்களையும் தம்முடன் சேர்த்துக் கொண்டு எம்பணி கொள்ள என்று அருள்கிறார் எனலாம். எல்லா உயிர்களுக்கும் இந்நெறி பொது நெறி யாதலின் இனி அருட்சட்ட நெறியில் ஈடுபட உள்ள எல்லா உயிர்களையும் தம்முடன் சேர்த்துக்கொண்டு எம் பணிகொள்ள என்று கூறியருள்வதாயும் கொள்ளலாம்.

இத்தகைய உயர்நிலையை அடைந்த மணிவாசகப் பெருமான் "தந்தது உன்றன்னை, கொண்டது என்றன்னை" என்று பாடியுள்ளார்.

இத்தகைய நிலையடைய விரும்பிய இராமலிங்க அடிகளார்

பட முடியாது இனித்துயரம்
 பட முடியாது அரசே!
பட்டதெலாம் போதும்; இந்த
 பயம் தீர்த்து என்னுடைய
உடல் உயிர் ஆதிய எல்லாம்
 நீ யெடுத்துக்கொண்டு உன்
உடல் உயிர் ஆதிய எல்லாம்
 உவந்து எனக்கே அளிப்பாய்"

என்று வேண்டுகிறார். பின்னர் அத்தகைய உயர் நிலை எய்தியதை

"தன்னையே எனக்குத் தந் தருளொளியால்
 என்னை வேதித்த என்றனி யன்பே" என்றும்
"என்னைத்தானாக்கிய ஜோதி"

என்றும் கூறியருள்வது குறிப்பிடத்தக்கது.

உலக உயிர்களெலாம் பேரின்பம் பெற வேண்டும் என்ற குறிக்கோளுடன் அருந்தவம் ஆற்றியதும், அருள்வரம் பெற்றதும், அருள் நிலை எய்தியதும், அருள் திருநெறியை எக்காலத்தும் எவ்வுயிர்க்கும் பொதுவாக வகுத்து வழங்கியதும், அரும்பெருந்துணையாய் இருந்து புரந்து அருளாட்சி புரிவதும் நம் குரு பெருமானின் அருள் வரலாற்றில் காணப் பெறும் தனிப்பெருஞ்சிறப்புகள் ஆகும் என்பதை நாம் அனைவரும் என்றென்றும் உளம் கொண்டு போற்றி, உயர்நெறி பேணிப் பேரின்பப் பெரும் பேறு பெற்று உய்வுறுவோமாக! அதற்கு ஏற்ற வகையில் எல்லாம் குருபரம் பொருளின் தனிப்பெருங் கருணை துணை புரியுமாக! எனப் பிரார்த்தித்துக் கொள்வோம்.

**53. எல்லையற்ற காட்சி தந்து எமனுக்கிட மில்லாமல்
பல்லுயிரும் காட்சிகொள்ளப் பலன் அளித்த
சின்மயமே**

சுவாமிகள் மதுரை மாநகரில் வைகையாற்றின் தென் கரையில் பரிபூர்ணப் பெருமான் திருக்காட்சி கண்டதிலிருந்து, திருக்குற்றால மலைக் குகையில் அருந்தவம் ஆற்றி அருட்பயன் பெற்ற வரையில் 'எந்தன் வினை தீர்த்தவனே' என்று தொடங்கும் அருட்பாடலில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார்கள். அப்பாடலின் ஈற்றடிக்கு முதல் அடியே இங்கு அமைந்துள்ளது.

சிற்றணுவுக்குள்ளும் சிற்றணுவாகச் செறிந்து விளங்கும் பரம் பொருள், பல்லாயிரங் கோடி அண்டங்களாகவும், அவையனைத்தும் அற்புதமாகச் சுழன்று இயங்கும் பெரு வெளியாகவும், அதனையும் கடத்திலங்கும் அற்புதச் சக்தியாகவும் திகழ்கின்றான். இறைவனின் இந்த மாபெரும் நிலையை எண்ணிப் பார்க்கவும் மனித அறிவுக்கு ஆற்றலில்லை.

சுவாமிகளின் அருந்தவ முடிவில் பரிபூரணப் பெருமான் தோன்றி, பல சிறந்த அருட் காட்சிகளை அருளுகின்றார். இறுதியில் இந்த அற்புத நிலையைக் காட்டியருள்கிறார். எமனை வென்று, என்றென்றும் நிலைத்திருக்கும் பேராற்றலை அருளுகிறார். "எமனுக்கிடமில்லாமல் எல்லையற்ற காட்சி தந்து" என அமைத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

சுவாமிகள் பரிபூர்ணப் பெருமானின் ஒப்புயர்வற்ற இந்த விஸ்வரூப தரிசனத்தை ஞானக் கண்ணால் கண்டு, பேரானந்த முற்றார், பரிபூர்ணப் பெருமான் "உன் மாபெருந் தவத்தைக் கண்டு மகிழ்ந்தோம். உனக்கு என்ன வேண்டும்?" என வினவினார். எல்லா உயிரும் இவ்வருட் காட்சியைக் காண வேண்டும்; இறவாப் பெருநிலை எய்த வேண்டும்; பேரின்ப முத்தி பெற வேண்டும்; அதற்கேற்ற அருள் நெறியை அருள வேண்டும்; இதுவே என் வேண்டுகோள் என்றார் சுவாமிகள். அவ்வாறே வரமும் பெற்றார், பன்னிரண்டு ஆண்டுகள் அரும் பெரும் தவம் புரிந்ததன் பயனாய் இவ்வரத்தைப் பெற்றார். இதுவரை இத்தகைய தவம் புரிந்தோரும், இத்தகைய வரம் பெற்றோரும் உலக வரலாற்றிலேயே இல்லை என்று கூறலாம். எமனுக்கிடமில்லாமல் பல்

லுயிரும் (இந்தக்) காட்சிகொள்ள பலன் அளித்த சின்மயமே என்று, 'எமனுக்கிடமில்லாமல்' என்ற சொல்லை இரண்டு பக்கமும் சேர்த்துப் பொருள் கொள்ளலாம்.

54. காணாத காட்சியெல்லாம்—ஏசாமி
கண்டு கொண்டேன் இச்சமயம்
பூணாது பூண்டலல்லவோ—ஏசாமி
பொன்னடியைச் சார்ந்து விட்டேன்

இறைவனுடைய திருவருளைத் துணையாகக் கொண்டு அவனுடைய அருட்சட்டத்தை பரப்பி, அதனால் இவ்வுலகில் நிகழ்ந்த பல அற்புதக் காட்சிகளையும், தனக்குள்ளே இறைவனுடைய அற்புதத்தால் தோன்றிய நிகழ்ச்சிகளையும், பூரணத்தை அடைந்த இச் சமயத்தில் தலைவியாகிய ஆத்மா கண்டு ஆனந்திக்கின்றாள்.

இறைவனின் அற்புத லீலைகளை வெளியே எடுத்துச் சொல்லாது மவுனம் பூண்டதாகவும், அதன் பயனாக இறையின்பத்தைத் துய்த்து, எல்லா உயிர்களும் இறுதியில் அடைகின்ற திருவடிப் பேற்றை எய்தியதாகவும் தலைவி குறிப்பிடுகின்றாள்.

## அடியவர் பணி அருளும் பயன்

55 நீதியைப் பெற விசாரமுற்று, நெறி
யாய் நடக்க, மறையோர்கள் சொற்படிநல்
நேமநிட்டை தவறா திருப்பவர்கள் துணையாகும்

நீதியே வடிவானவன் இறைவன். நீதி என்ற சொல்லுக்கு உண்மையென்றும் ஒரு பொருள் உண்டு. உண்மைப் பொருளாக உள்ளவனும் இறைவனே. இறைவனை அடைய வேண்டும் என்ற விருப்பம் முதலில் உண்டாக வேண்டும். அந்த விருப்பம் தீவிரமாக வேண்டும்.

இறைவனைப் பற்றிய சிந்தனை இடைவிடாது இருத்தல் வேண்டும். இறைவனை அடைய வேண்டும் என்ற உயர் நாட்டமுடன், அதற்கேற்ற அருள் நெறியில் நடக்க வேண்டும்

உலகம் உய்யும்வண்ணம் அருள் மாமறைகளை அருளியுள்ள அருள்ஞான முனிவர்கள், இறைவனை அடைய

வேண்டும் விருப்பம் தீவிரமாக உள்ளவர்கள் என்ன என்ன நியமங்களை அனுசரிக்க வேண்டும் என்று அருளியுள்ளார்களோ, அந்த நியமங்களில் சிறிதும் தவருது திரிகரணசுத்தியுடன் கடைப் பிடித்து வாழ்வதோடு, நாள் தோறும் வேளை தவருது அருள் நிட்டை பேணி, தவநிலையில் முன்னேறிச் செல்லும் மெய்யடியார்களோடு உண்மையன்புடன் உறவு கொள்ள வேண்டும். அவர்களுடைய தொடர்பு அருள் நாட்டம் மிக்க அன்பர்களுக்குச் சிறந்த துணையாகித் திகழும். பேணும் தவநிலையினின்று நெகிழாது நிலைத்திருக்க உதவி புரியும்; அருள் நிலையில் முன்னேறிச் செல்ல வழிவகுக்கும் துணையாய் இருந்து ஊக்குவிக்கும்.

நேம நிட்டை தவருது அருட்சட்ட நெறியை முறைப் படிபேணி, தவநிலையில் முன்னேற்றமுற்றுத் திகழும் உயரடியார்களின் தொடர்பு, கூட்டுறவு அருள் நாட்டமுடைய அடியவர்க்குத் துணையாயிருந்து தவநிலையில் முன்னேற ஊக்குவிக்கும் என சுவாமிகள் அருளியுள்ளார்கள்.

**56. அறிஞர் திருவடி அனுதினம் வழிபட**
**அமிர்த குணமது பெருகிடும்; வினையது**
**அகலும் மனமது தெளிவுறும்; ரகசியம் வெளியாகும்**

அறிஞர் என்ற சொல்லுக்கு அறிவுடையவர் என்று பொருள். அறிஞர் என்ருல் கல்வியறிவு உடையவர்கள் என்றே பெரும்பாலோர் பொருள் கொள்வர். கற்றதனுல் ஆய பயன் வாலறிவன் நற்ருள் தொழல்' என்பது நாயனர் கருத்து. ஆதலால் இறைவன் திருவடி எய்துதற்கு உரிய அருட் கல்வி கற்ருேரே கற்ருேர் ஆவர். ஆதலால் அவர்களே அறிஞர்கள் ஆவர்.

அறிஞர் என்ருல் ஞானியர் என்று ஒரு பொருள் ஆதலால் இறைவனே மெய்ப்பொருள் என்ற மெய்யுணர்வு பெற்று. அதற்கேற்ற சாதனங்களில் தீவிரமாக ஈடுபட்டு, தவ நிலையில் உயர்ந்து மெய்ஞ்ஞான மயமாகத் திகழ்பவர் 'அறிஞர்' எனப் போற்றப் பெறுபவர் ஆவர்.

உயர் அடியார்களின், உத்தம ஞானியாரின் தொடர்பு கொண்டு அவர்களின் திருவடிகளை நாள்தோறும் வழிபட்டுப் போற்றினுல், நம்மிடத்துள்ள தீய குணங்கள் விலகி, உயர்ந்த

தூய குணங்கள் ஓங்கி வளரும். அதாவது ராஜஸ தாமஸ குணங்கள் விலகி, சத்துவ குணம் வளர்ச்சியுறும்.

'அமிர்தம்' என்ற சொல்லுக்கு இனிமை, அழியாமை, மோட்சம் என்றெல்லாம் பொருள் கூறுவர் ஆன்றோர். உயிர்க்கு இனிமை பயக்காத தீய குணக்கூறுகள் நீங்கி, உயிர்க்கு இனிமை பயக்கும் தூய குண நலங்கள் வளர்ச்சியுறும்.

அழியாப் பொருளாகிய பரம் பொருளை எய்தத் தக்க, இறவாப் பெரு நிலையாகிய முத்திப் பேறு அடையத்தக்க சத்குணங்கள் மேலோங்கி வளரும்.

பேரின்ப மதுவாகிய அருளமுதம் உள்ளே ஊறிப் பெருகும்; கருவி கரணங்கள் தோறும் பாய்ந்து பரமானந்தம் அளிக்கும்

'அற்புதமான அமுத தாரைகள் எற்புத் துளைதொறும் ஏற்றினன்' என்ற திருவாசகமும், 'மதுவாமிர்தம் உண்டு சுகம் பெறும் வழிதானே' என்ற ஆண்டவர் அருட் பாடலும் இவ்வுண்மையை விளக்குகின்றன.

இறைவனிடம் உண்டாகும் உண்மையன்பு ஓங்கி வளர்ந்து, பக்திக் கனலை, ஞானக் கனலை மூட்டி வளர்க்கும். அக்கனல் ஓங்கி வளர்ந்து, அமிர்த ஊற்றைப் பெருக்கும்.

உள்ளே வளர்ந்தோங்கும் பக்தி மயமான, ஞான மயமான கனலின் முன் நிற்க முடியாமல் வினைகள் அகன்றொழியும்.

வினைக்குக் காரணமாக உள்ள அசுத்த மாயையும் விலகிவிடும். உண்மையை உணர வொட்டாமல் தடுப்பது மாயையாகும். அது இல்லாத உலகப் பொருளை உள்ள பொருளாகவும், உள்ள பொருளாகிய கடவுளை இல்லாத பொருளாகவும் எண்ணச் செய்யும். மாயையை இரண்டு வகையாக ஆன்றோர் கூறுவர்.

ஆன்மாவைப் பற்றியுள்ள அழுக்கை நீக்கி முத்திப் பேறாகிய பேரின்பத்தை அருள வேண்டும் என்னும் மாபெருங்

கருணையால், இறைவன் ஆன்மாவோடு மாயையைப் பிணைத்து அனுப்பியுள்ளான்.

ஆன்மா பக்குவமுற்ற போது உலக ஆசைகளைப் பெருக்கும் அசுத்த மாயை விலகி விடுகிறது. அம்மாயையை அது என்ற சொல்லால் ஆண்டவர் குறிப்பிடுகிறார்.

அப்போது, உயிரை இறைவனிடம் அழைத்து செல்லும் சுத்தமாயை, ஆன்மா உயர் நிலையடையத் துணை புரியும்.

அசுத்த மாயை விலகியதும் மனத்திலிருந்த ஐயம் விலகிவிடும். தெளிவு உண்டாகும்.

தெளிவு உண்டாகும் போது இதுவரையும் உணர இயலாதிருந்த ரகசியம் வெளியாகும். அதாவது இறைவனே என்றும் உண்மைப் பொருள். உலகம் யாவும் அவனுக்கே உரிய உடைமை. உயிர்கள் யாவும் அவனுடைய அடிமை. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள உறவு அனாதி யானது. இறைவன் கருணையே வடிவமானவன். ஜீவாத்மாவைப் பக்குவப்படுத்திப் பேரின்ப மூட்டவே உடம்பு, கருவி காரணங்கள், உலகம், போகங்கள் யாவும் தந்து இயக்கியருள்கிறான், ஜீவாத்மா அவனருள் துணையால் பக்குவமுறும் போது, அதனைப் பற்றியிருந்த பாசத்தை அறவே விலக்கிப் பேரின்பப்பேறு அருள்கிறான். அத்தகைய உயர்முத்தியாகிய பரமானந்தத்தை அடைய வேண்டியதே வாழ்வின் குறிக்கோள் என்ற ரகசியம் அனைத்தும் தெளிவாக விளங்கும் என உணர்த்தியருள்கிறார்.

57. தொண்டர்பணி செய்பவர்கள்
சூக்ஷ்மாதி சூக்ஷ்ம மெல்லாம்
கண்டு தெளிவாரடி — ஏ குயிலே
காணாத காட்சி யெல்லாம்

எல்லாம் வல்ல இறைவனுக்கு மனம் மொழி மெய் ஆகிய திரிகரணங்களாலும் தொண்டு புரிவதே உயிர்கள் செய்ய வேண்டிய உயர் கடமையாகும் என்னும் உண்மையை தெளிவுற உணர்ந்து, உள்ளத் தூய்மையுடன் உயர் தொண்டாற்றும் உத்தமமான தொண்டர்களின் மேன்மையை உணர்ந்து அவர்களுக்குப் பணிவிடை செய்யும்

பக்தர்கள், ஜீவாத்மாக்கள் உணர வேண்டிய சூக்ஷ்மமான உண்மைகளையும், அதிசூக்ஷ்மமான உண்மைகளையும் தம் அகக் கண்ணால் கண்டு உள்ளத்தெளிவு பெறுவார்கள்.

இதுவரையில் கண்டறியாத, உலக மக்களால் எளிதில் காணுதற்கரிய அருட்பெருங்காட்சிகள் பலவும் அம்மேலோர் களின் திருவருள் துணையால் கண்டு பேரின்பம் அனுபவிப்பார் கள் என்று அருளியுள்ளார்.

அதாவது 'தெய்வ பக்தியைக் காட்டிலும், அடியார் பக்தி எளிதில் பேரின்ப அனுபவத்தை வழங்கியருளும் என்னும் உண்மையை சுவாமிகள் விளக்கியுள்ளார்கள்.

குருபக்தியிற் சிறந்து, ஒப்புயர்வற்ற அருந்தவம் பேணிய பிள்ளையார்குப்பம் திருவார் திரு அருட்சக்தி அன்னையார் அரும்பெரும் பாடுபட்டு அடைந்த உயர் நிலை களை, அவ்வருளன்னையார்க்கு சற்றும் சிரமம் பாராது இரவும் பகலும் மனப்பூர்வமாகத் தொண்டாற்றிய கடுவ னூர் தாய் அவர்கள் எய்திய அற்புதம் இங்கு உணரற்பாலது.

58. நிருவிகற்ப சமாதி பெற்றிடும்
அடியர் பொற்பதமே பிடித்திடு
நிட்டை நிலை பூரணமதாகுமே

பொறிபுலன்கள் சிறிதும் அசைவின்றி அமைதியாக ஓரிடத்தமர்ந்து, எண்ணங்கள் ஏதுமின்றி, மனத்தை ஒரு முகப் படுத்தி, இறைவன் திருவடியில் ஒன்றச் செய்யும் நிட்டையில் உயர்நிலை பெறுதல் சமாதி நிலையெனப்பெறும்.

உலகை மறந்து, உடம்பை மறந்து, ஆகாரம் ஏதுமின்றி, நீரும் பருகாது, எவ்வித வேறுபாடும் தோன்றாத, உயர் தவ நிலையில் மனமும் மற்றைக் கரணங்கள் அனைத்தும் பூர்ணமாக ஒடுங்கி, இறைவனின் அருளமுதருந்தி, பரமானந்த அனுபவத் தில், நாள் கணக்கில், மாதக்கணக்கில் நெடுங்காலம் நிலைத் திருக்கும் ஒப்பற்ற பெருந் தவ நிலை நிர்விகற்ப சமாதியெனப் பெறும்.

அத்தகைய பிரம்மானந்த அனுபவம் பெற்றுத் திகழும் உயர் அடியரின் பொன் போன்ற திருவடி மலர்களைத் துணை யெனப்பற்றி, அவர்களுக்குப் பணிவிடை புரிந்தால், நிட்டை

நிலையில் பூர்ணம் பெற்ளுேர் எய்தும் மாபெரும் பயனை அடைய இயலும் என சுவாமிகள் அருளுகின்ருர்கள். சுவாமிகள் ஆகிய தலைவி அறிவு என்னும் தோழிக்கு உரைப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது.

'குயிலே' என்னும் சொல் தோழியைக் குறிக்கும். சுவாமிகள் அத்தகைய ஒப்புயர்வற்ற நிர்விகற்ப சமாதியில் குற்ருலம் குகையில் நிலைத்திருந்துள்ளார்கள். பின்னர் அருளுலாச் செய்து, சட்ட நெறியைப் பரப்புகையில், மேலிலந்தைக் குளத்தில் இரண்டரை ஆண்டுக்காலம் நிர்விகற்ப சமாதியில் நிலைத்திருந்துள்ளார்கள். அப்போது தரிசித்து அருட்பேறு பெறும் வாய்ப்பு நமக்கெல்லாம் வாய்க்கவில்லை.

பிற்காலத்தில் பிள்ளையார்குப்பம் திருவார்திரு அருட் சக்தி அன்னை அவர்கள் நீரும் பருகாமல், எச்சிலும் விழுங் காமல், உதடுகளிலும் ஈரமின்றி, உலக நினைவும், உடம்பு நினைவும் அணுவளவுமின்றி, ஒப்புயர்வற்ற நிர்விகற்ப சமாதி நிலையில், மாதக்கணக்கில், வருடக்கக்கணகில் தொடர்ந்து நிலைத்திருந்து, மிகமிக மேலான அருளனுபவம் பெற்றுத் திகழ்ந்த அற்புதத்தை அடியவர் பலர் கண்ணுர நேரிற் கண்டு, வியந்து போற்றியது உலகறிந்த உண்மை.

அவ்வருளன்னையாரின் பொன்னுர் திருவடிமலர்களே துணையெனப் பற்றி வேறு சிந்தனையேதுமின்றி, அவர்களுக்குப் பணிவிடை புரிவதையே உயிர் நாடியாக் கொண்டு அல்லும் பகலும் அனவரதமும் அருந்தொண்டாற்றிய அற்புத அன்னையாம் கடுவனூர் தாய் அவர்கள், அத்திருத்தொண்டின் பலனுலே, உயர்தவநிலை அடைந்ததும் அடியவர் அன்பர் அனைவர்க்கும் தெரியும்.

## 59. முத்தர்கள் பணி செய்குவாய்—இருவினைகள் அற்றுநற் கதி அடைகுவாய்

**நாம்** நற்கதி அடைய வேண்டும். பேரின்ப நிலையாகிய முத்திப் பேறு பெற்றுய்ய வேண்டும். அதற்குத் தடையாக உள்ளவை நம்முடைய இருவினைகளாகும். நாம் முன் பல பிறவிகளிற் புரிந்த புண்ணியம், பாவம் என்ற இருவினைகள் நமக்குத் தொடர்ந்து பிறவியைக் கொடுத்துக் கொண்டே இருப்பதால், நாம் நற்கதியடைய இயலவில்லை.

எல்லா உயிரும் நற்கதியடைய வேண்டும் என்னும் மாபெருங் குறிக்கோளுடன் நம் குருநாதர் பன்னிரண்டு ஆண்டுகள் அரும்பெருந்தவம் ஆற்றி அதன் பயனாக அருள் திருநெறி கண்டு ஆருயிர்த் தொகைக்கு வழங்கி யுள்ளார்கள்.

அரும்பெருந் தவம் புரிந்தால் இருவினைகள் அகன்று விடும் என ஆன்றோர்கள் அருளியுள்ளார்கள். அரும்பெருந் தவம் ஆற்ற நம்மால் இயலவில்லை. இத்தகைய நிலையில் உள்ள நாம் எப்படி இருவினைகளினின்று விடுதலை யெய்தி நற்கதி அடைய முடியும் என்ற ஐயம் தோன்றுகிறதல்லவா?

சுவாமிகள் அதற்கொரு வழி சொல்கிறார்கள். என்ன வழியென்று பார்க்கலாம்.

ஆசைப் பிசாசைத் துரத்தி, இறைவன் திருவடி மலரை அல்லும் பகலும் அனவரதமும் நெஞ்சில் இருத்தி, பாசப் பகையை அறுத்து, ஓம் என்னும் பிரணவத்தோடு ஒன்றி, உயர்தவம் பேணி, ஞான அனுபூதியிற் சிறந்து மும்மலங் களைப் போக்கி ஜீவன் முத்தி நிலையெய்திய அருட்பெரியார் களாகிய முத்தான்மாக்களுக்குத் தொண்டு புரிந்தால் இரு வினைகள் நீங்கப் பெற்று, நற்கதியாகிய முத்திப்பேற்றை அடையலாம் என சுவாமிகள் அருளுகின்றார்கள்.

குறிப்பு; முத்தான்மாக்கள் எங்குள்ளார்கள் என்று தேடி, அறிந்து அவர்களுக்குத் தொண்டாற்றி நற்கதி அடைவது என்பது எளிதான காரியமன்று. சுவாமிகளை விட மேலான முத்தான்மாக்கள் யாவர் உள்ளனர்? ஆதலால் மிகச் சிறந்த முத்தான்மாவாகிய நம் குருநாதரின் திருவடியே துணையெனப் பற்றி அவர்க்குத் தொண்டாற்றினால் நிச்சய மாக நற்கதி அடையலாம். அவருக்குத் தொண்டாற்றுவது எப்படியென்ற ஐயம் எழலாம். அவர் வகுத்துள்ள அருட் சட்ட நெறியை அணுவும் தவறாது பேணி, அவரது பொன் னார் திருவடி மலர்களை உளம் கொண்டு போற்றி வழிபட்டு அருள் வாழ்வாற்றி வந்தால், நிச்சயமாக இருவினைகளி னின்று நீங்கி நற்கதியாகிய முத்திப்பேற்றை எய்தி உய்ய இயலும் என்பது உய்த்துணரத்தக்கது.

## அடியவர் நிலை

60. சருவம் அவனது செயலென உருகுவர்
தரணி தனில் அதி மகிமையை உடையவர்
சலனம் விடுபடு சமரச நிலைகளும் மறவாரே

இறைவனின் திருவருளைப் பரிபூர்ணமாகப் பெற்றிலங்கும் அடியவர்களின்உயர் நிலையைப் பற்றி சுவாமிகள் விளக்கியுள்ளார்கள். இறைவன் மெய்ஞ்ஞானக் கனல் மயமானவன். அவனை அடைய நாடும் அடியார்கள் முதற்கண் ஆசையிலிருந்து விடுபட்டு அன்பில் திளைக்கிறார்கள். அன்பு முதிர்ச்சியடைகையில், அன்புக் கனல் பக்திக் கனலாகின்றது. பக்திக் கனல் தவக்கனலாகின்றது: தவக் கனல் சிவக் கனலாகின்றது. 'அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்' என்பது திருமந்திரம்.

அன்பாலுருகி அகம் குழைந்தார்க்கன்றி, என் போல் மணியினை எய்தவொண்ணாதே" என்னும் பொன்மொழி சிந்தித்தற்குரியது. மணிவாசகர்க்கு அருள் புரிந்த இறைவன் அவருடைய என்பெலாம் உருகுமாறு உருக்கினார். சிவமயமாக்கினார்.

இறையருளைப் பூர்ணமாகப் பெற்ற மெய்ஞ்ஞானியர், பேரருளாளர்களின் திருவுள்ளம் எப்போதும் ஞானமயமான இறைவன் திருவடியில் ஒன்றிய வண்ணம் திகழ்வதால், அவர்கள் எப்போதும் உருகிய வண்ணம் விளங்குவர்.

அருளனுபவத்திற்கனிந்து பொலியும் அப்பர் பெருமானின் திருவுருவைச் சேக்கிழார் பெருமான் அடிக்கடி நம் முன் காட்டியருள்கிறார்.

"தூய வெண்ணீறு துதைந்தபொன்
மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும்
சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல் அன்பு நீர்பொழி
கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார்
புகுந்தனர் வீதியுள்ளே"

என்ற பாடல் அவற்றுள் ஒன்றாகும்.

"நாயகன் சேவடி தைவரும் சிந்தையும், நைந்துருகிப் பாய்வது போல் அன்பு நீர் பொழி கண்ணும்" என்ற பகுதி, இறைவன் திருவடிக்கண் ஒன்றியுள்ள அவரது சிந்தையையும், அவரது இடையறுப் பேரன்பையும். ஆனந்தக் கண்ணீர் பெருக்கும் திருவிழிகளையும் உன்னச் செய்து, அவரது திரு வுள்ளம் உருகிய வண்ணம் திகழ்வதை விளக்குகின்றது.

அவ்வாறு உருக்கமே வடிவாய் விளங்கும் அவர்கள் தவநிறைவிலும், ஞானப் பொலிவிலும், அருட்கனிவிலும் ஒப்புயர்வற்று விளங்குவார்கள். அவர்களின் மகிமை புவி யிலேயே மிகமிக மேலோங்கித் திகழும்.

இறைவனின் மகிமை ஈடிணையற்றது என்று மேலோர் கூறுவர். அப்படியிருக்க, அடியார்களின் மகிமை தனிச் சிறப்புடையது என்று எவ்வாறு கூற இயலும் என்ற ஐயம் ஒரு சிலர்க்கு எழலாம்.

இறைவனை நாம் கண்ணுற் கண்டு வணங்க இயலாது. அடியார்களைக் கண்ணுற் கண்டு வணங்கலாம்: மேலும் இறைவனிடம் பெற முடியாததை அடியார்கள் மூலம் பெற இயலும். இதற்கு உதாரணமாக ஒரு கதை உண்டு. நாரதர் ஒரு சமயம் வைகுண்டத்திற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு பக்தர் அவரைக் கண்டு வணங்கி, நீங்கள் வைகுண்டம் போகிறீர்களே; பகவானைக் கண்டு எனக்கு மகப்பேறு உண்டாக வரம் பெற்று வர வேண்டும் என்று வேண்டினார்.

வைகுண்டத்தில் நாரதர் பகவானிடம் இந்த பக்தருக்காக வரம் கேட்டார். "இந்தப் பிறவியில் அவனுக்கு மகப்பேறு இல்லை" என்று பகவான் கூறி விட்டார். திரும்பி வருகையில் நாரதர் இச் செய்தியைப் பக்தரிடம் கூறிச் சென்றார்.

பிறகு சில ஆண்டுகள் கடந்து, நாரதர் அதே வழியாகச் சென்ற போது அவ்வீட்டின் அருகில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் யாருடைய குழந்தைகள் என அங்கிருந்தவர்களைக் கேட்டார். இவ்வீட்டுக்கு உரியவரின் குழந்தைகள் என்றனர். பகவான் தம்மிடம் பொய் சொல்லி

விட்டாரே என்று நாரதர் வருத்தத்தோடும் வைகுண்டம் சென்று பகவானிடம் விவரம் கூறி வினவினர்.

அப்போது பகவான், "அந்தப் பக்தரிடமே சென்று மகப்பேறு உண்டானதற்குக் காரணம் கேட்டறிக" என்றனர். நாரதர் உடனே பூலோகம் வந்து பக்தரைக் கண்டு விசாரித்தார்.

ஒரு சமயம் சிறந்த அடியார்கள் சிலர் அவ் வழியாக வந்ததாகவும், அவர்களைக் கண்டு போற்றி, உண்மை யன்புடன் உபசரித்ததாகவும், அவர்கள் புறப்பட்டுச் செல்லும் போது, அவர்க்கு மகப் பேறின்மை அறிந்து மகப் பேறு உண்டாகும் படி அருள் பாலித்ததாகவும், அதன் பயனுய்க் குழந்தைகள் பிறந்ததாகவும் கூறினர். உடனே நாரதர் வைகுண்டம் சென்று பகவானிடம் விவரம் சொன்ன போது, தாம் நியதிக்கு மீறி எதுவும் செய்ய இயலாதென்றும் அடியவர்கள் அனைத்தும் அருளும் பேராற்றல் பெற்றவர்கள் என்றும், அவர்கள் அருள் பாலிப்பதைத் தான் தடுக்க இயலா தென்றும் கூறியருளினர். பிறகுதான் நாரதர்க்கு உண்மை விளங்கியது. மற்றும் ஒரு உதாரணம் பார்க்கலாம்.

அடியார்கள் சிலர் ஒரு சமயம் பிள்ளையார்குப்பம் உயர் தவத்திரு அருட்சக்தி அன்னையின் சன்னிதிக்குச் சென்றோம். அவர்களின் பொன்னார் திருவடி மலர்களைப் போற்றிப் பணிந்து அவர்கள் திருவடிக்கருகில் அமர்ந்து அவர்கள் கூறும் அருள்மொழிகளைக் கேட்டு ஆனந்தமெய்துகையில், அவர்கள் ஒரு உயர்ந்த உண்மையை விளக்கியருளினர்.

மார்க்கண்டேயருக்குப் பதினாறு வயது என்று அருளிய சிவபெருமான், பதினாறு வயது முடிந்த போது வந்து பற்றிய எமன் மீது ஏன் கோபம் கொண்டார்? ஏன் தண்டித்தார்? வயது முடிந்ததும் அழைத்தேகும்படி ஆணையளித்து எமனை அமர்த்தியவர் இறைவன்தானே! அவ்வாணைப்படி நடந்த எமனைத் தண்டித்தது நியாயமா? என்று கேட்டனர். எங்களுக்கு ஒன்றும் புரியாமல் திகைத்தோம்.

பிறகு தவத்திரு தாய் அவர்களே தெளிவான விளக்கம் அருளினர்.

மார்க்கண்டேயர் இளம் குழந்தையாக வளர்கை யிலேயே, சகல வேத சாஸ்திரங்களிலும் வல்லவராகவும் ஆசார சீலராகவும் திகழ்ந்தனர். அவருடைய பெற்ருேர் வெளியிற் சென்றிருந்த போது, அவருடைய தந்தையாரைக் கண்டு அளவளாவச் சில சிறந்த முனிவர்கள் அந்த ஆசிர மத்துக்கு வந்தார்கள். அவர்களைக் கண்ட மார்க்கண்டேயர் பேரன்போடும் போற்றிப் பணிந்து ஆசனத்தமர்த்திப் பூசித்து நறுங்கனிகள் தந்து உபசரித்து, அவர்கள் கூறும் அறிவுரை களைப் பக்தியுடன் கேட்டு இன்புற்றனர். அது கண்டு களித்த முனிவர்கள் அவர்க்குச் சிரஞ்ஜீவி பட்டம் வழங்கினர். மாலையில் அவரது பெற்ருேர் வந்தவுடன் கண்டு பேசிவிட்டுப் புறப்பட்டனர்.

எல்லா உயிர்களின் வாழ்வையும் குறிக்கும் சித்ரகுப்தன் கணக்கில், இவ்விவரம் பின்ஞடி எழுதப் பெற்றுள்ளது. இதைச் சரிவர கவனிக்காமல், புரிந்து கொள்ளாமல், அவர் பிறக்கும் போது இறைவன் அவர்க்குப் பதினறு வயது என்று குறிப்பிட்டதைக் கருதி அவரிடம் குறுகிய எமனை இறைவன் தண்டித்தான் என்றும், பின்னர் தன்குற்றம் உணர்ந்து எமன் போற்றினன் என்பதும் வரலாறு என விளக்கியருளினர். அது வரை புரியாதிருந்த உண்மையை அப்போது நாங்கள் புரிந்து கொண்டு அருளன்னையாரைப் போற்றிப் பரவினேம்.

சூரியன் பஞ்சை எரிப்பதில்லை, அக்கதிரொளி பெற்று உள்ள முப்பட்டைக் கண்ணுடி பஞ்சை எரிக்கிறது. சூரியன் ஒளியைத் தாங்கலாம். சூரியன் ஒளியால் சூடேறியுள்ள சுடு மணலின் உஷ்ணத்தைத் தாங்க முடியாது. திருக்கச்சி நம்பியார் திருவடிப் பேறு தர வேண்டும் என வரதராஜப் பெருமானிடம் கேட்டுக் கொண்ட போது, அது நாம் தர இயலாது; குருமூலமாய்த்தான் பெற வேண்டும் என்று பகவான் கூறியதும் இங்கு கருதற்குரியது.

அதிமகிமையை உடையவர் என்று சுவாமிகள் அருள் கிருர்கள். உலகம் முழுதும், இயற்கை முழுதும் அடியவர்க்கு அடி பணியும். அவர்கள் எண்ணியபடி யாவும் நடக்கும்.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்"

என்பது திருக்குறள்.

"திண்ணியர்" என்னும் சொல் தவத்திண்மையை, அருள் திண்மையை உணர்த்தும்.

அவர்கள் உள்ளம் சற்றும் சலனம் அடைவதில்லை அவர்கள் எப்போதும் எல்லா உயிருளும், எல்லாப் பொருளுளும் இறைவனையே காண்பர். சமரச உணர்வே அவர்களிடத்து நிலைத்திருக்கும், திருவண்ணாமலையில் ஈசான ஞானதேசிகர் என்ற மகான் தவம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு ஒரு சிங்கம் காவல் இருந்தது. எங்கும் அருணாசலேசுவரரையே காணும் அவர் யாரைக் கண்டாலும் 'அருணாசலம்' என்பார். சிங்கத்தையும் 'அருணாசலம்' என அழைப்பார். அது அவரிடம் வந்து ஆனந்தமாக விளையாடும்.

எங்கும் இறைவனைக் காணும் நிலையுடைய அவர்கள், யாவும் அவன் செயல் என்ற எண்ணமுடன், உருகிய வண்ணம் இருப்பர். மிகுந்த மகிமையை உடையவராகத் திகழ்வர். அவர்களை, கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்; ஓடும் செம் பொனும் ஒக்கவே நோக்குவார்; அவர் பெருமை விளம்பும் தகையதன்று, மிக மிக உயர்வுடையது எனச் சேக்கிழார் பெருமான் கூறியுள்ளார்.

எல்லா ஊரும் அவர்களின் ஊரேயாகும். எல்லா உயிரும் அவர்கட்குக் கேளிரே. அவர்கள் எல்லாம் இறையருள் மயமாகக் காண்பதால் உயர்ந்தோரைக் கண்டு வியப்படைய மாட்டார்கள்.

ஏதோ சில சமயம் மிக மிகச்சிறந்த பேரருளாளர்களைக் காணும் போது போற்றுவர். தாம் மகிமை மிகுந்தவர் என எண்ணாமல் அடக்கமுடனே திகழுவர். அப்பர் பெருமானும் சம்பந்த சுவாமிகளும் சந்தித்த போது ஒருவரையொருவர் போற்றிப் பணிந்த சிறப்பு உன்னி உருகி இன்புறத்தக்க தாகும். நம் குருபரனும், மாணமதுரைத் துறவியாரும் சந்தித்த போதெல்லாம் ஒருவரை ஒருவர் போற்றிய சிறப்பும் கருதத் தக்கதாகும்.

இழிந்தோரைப் பற்றிய எண்ணமே அவர்களுக்கு எழாது. அவர்களைத் தாழ்வாகக் கருதுவதோ பேசுவதோ யாதும் செய்யமாட்டார்கள்.

அத்தகைய உயர் அடியவர்களின் செம்மலர்ப் பாதங்களை உன்னிப் போற்றி உயரின்பம் பெற்றுய்வோமாக!

அன்பு வழி காட்டும் அருளுபதேசங்களை அருளியுள்ள அருட் குருபரனாரின் பொன்னார் திருவடி மலர்களைப்போற்றிப் பணிந்து, அவ்வுபதேசங்களின்படி நடந்து அருள்வாழ் வாற்றிப் பேரின்பப் பயன்பெறக் கருணை புரியுமாறு பிரார்த்திப்போமாக!

## குருநாதர் துதி

**('பொன்னார் மேனியனே என்ற பண்')**

கண்ணார் ஒண்மணியே கருணைக்கடலே அடியார்
பண்ணார் பாடல்பல நிதம் பாடி வழுத்திறையே
விண்ணார் தேவர்புகழ் இருடிப்பதி மேவியொளிர்
அண்ணல் ஆரியனே அடியேன் உன் அடைக்கலமே. 1

உழவாய்ப் பல்தொழிலாய் உயர் செல்வமும் ஆனவனே
பழமாய் இன்சுவையாய்ப் பயனுயொளிர் பண்பினனே
முழவார் நல்லிருடி நகர் மேய முழுச்சுடரே
அழகா அற்புதனே அடியேன்உன் அடைக்கலமே.. 2

தூசாய் நல்லுணவாய் துணையானவனே அடியார்
நேசா நேர்மையனே நிகரேதுமிலாதவனே
ஈசா நல்லிருடிப் பதியின் கண் இலங்கிறையே
ஆசா பாசமிலாய் அடியேன்உன் அடைக்கலமே. 3

இச்சை செயல்அறிவாய் இணைந் தெங்கும் மிளிர்பவனே
நச்சை நேர்மனமும் திருந் தச்செயும் நாயகனே
விச்சை வல்லவர்சூழ் இருடிப்பதி மேயவனே
அச்சம் தீர்ப்பவனே அடியேன்உன் அடைக்கலமே. 4

நித்தா நிர்க்குணனே நினைவோருளம் கோயில் கொளும்
கர்த்தா வானவனே இருடிப்பதிக் காரணனே
பர்த்தா வென்றமைந்தே எனைப் பாலனம் செய்பவனே
அத்தா ஆண்டவனே அடியேன்உன் அடைக்கலமே. 5

### வாழ்த்து

வாழ்க மதுராபுரி வாழ் பரிபூர்ண கணநாதர்
மலர்த்தாள் வாழ்க!
வாழ்கஇரு டியர்பட்டிக் குருபரனுர்
வண்மலர்ச்சே வடிகள் வாழ்க!
வாழ்கஇந்த வையகத்தில் அருட்சட்ட
நெறியெங்கும் வயங்கி வாழ்க!
வாழ்கஅருட் சட்ட நெறி பேணியருள்
வாழ்வாற்றும் அடியார் வாழ்க!

### மங்களம்

திருவளரும் மதுரைநகர்ப் பரிபூர்ண கணபதிக்கு
ஜெயமங்களம்—நித்ய—சுபமங்களம்
அருள்வளரும் இருடிநகர் அண்ணல் குரு நாதருக்கு
ஜெய மங்களம்—நித்ய—சுபமங்களம்
தெருள் வளரும் அருட்சட்டச் செந்நெறியைப்
பேணுநர்க்கு
ஜெயமங்கம்—நித்ய—சுபமங்களம்
பொருள் வளரும் புவியின்மிசை பொலியுமுயிர்
அனைத்தினுக்கும்
ஜெயமங்களம்—நித்ய—சுபமங்களம்.

---

# அருளுபதேசங்கள் அட்டவணை

இறுதியில் உள்ள எண் 'வழி காட்டும் வான் பொருள்' நூலில் இணைக்கப்பெற்றுள்ள அருட்பாடல் பகுதியில் உள்ள, பக்கத்தைக் குறிக்கும்.

---

பாலகவி. **மீ. கே. வேங்கடராமன்** அவர்கள்

இயற்றிய நூல்கள்

குருபர வணக்கம்

சற்குருநாதர் திருவடிப் புகழ்ச்சி

சற்குரு நாமாவளி

மதுரைப் பரிபூர்ண விநாயகர் திருவெம்பாவை,
திருப்பள்ளியெழுச்சி, திருப்பல்லாண்டு

திருக்கோயில் திருப்பணி முறையீடு

இரெட்டியப்பட்டி குருநாதர் அர்ச்சனை

அருட் ப்ரஸாதம்

குருநாதர் பிள்ளைத்தமிழ்

குருஅருள் திருவுந்தியார்

பேரின்ப வேட்கை

குருஅருள் வேட்டல்

அருள்மணிப் பெட்டகம்

அருள்நெறி மாலை

அன்பின் ஒளி

அருள்சட்ட வழிபாட்டு முறை

அருட்சக்தி அன்னை வரலாறு

கருணைமிகு வள்ளல் அருள்நிறை சரிதம்

சமயப் பொது நெறி கண்ட சற்குருநாதர்

விவரங்களுக்கு:

**சற்குருதாசன் டிரஸ்ட்,**
11-B, நிமந்தகார ஒற்றைவாடை வீதி,
பெரிய காஞ்சிபுரம்-631 502.
(செங்கற்பட்டு மாவட்டம்.)



# வேண்டுகோள்

விழுப்புரம்-விருத்தாசலம்-திருச்சிராப்பள்ளி குறுக்குப் பாதையில், திருவெண்ணெய்நல்லூர் ரெயில்நிலையத்துக்கருகில் உள்ள அருள் நகரில் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் பெயரில் எட்டாம் வகுப்பு வரை உள்ள அருட்கொடிப் பள்ளியும் இலவச மாணவர் இல்லமும் திருவருள் துணைகொண்டு நடந்து வருகின்றன. மாணவர் இல்லத்திற்கு நிரந்தரமான ஒரு கட்டிடம் தேவையெனக் கருதி அதற்கேற்ற அஸ்திவாரமிட்டு, அடித்தளம் அமைக்கப் பெற்றுள்ளது.

தர்ம உள்ளம் உடையவர்கள் தாராளமாக நன்கொடை, வழங்கி ஏழை எளிய மாணவர்களின் கல்வி வளர்ச்சிக்கு உதவிபுரிந்து, எல்லாம் வல்ல ஸ்ரீ குருபரனின் தனிப்பெருங் கருணைக்கு உரியவராக வேண்டுகிறோம்.

இங்ஙனம்,
சுவாமிகளின் அடியார்கள்.

---

பணமாகவோ, பொருளாகவோ நன்கொடை
அனுப்பவேண்டிய முகவரி :-

**ந. ஞானகுரு,** (காப்பாளர்)
இரெட்டியப்பட்டி அடிகளார் மாணவர் விடுதி,
அருள்நகர், அரசூர் அஞ்சல், விழுப்புரம் R. M. S.

கமலம் பிரஸ், காஞ்சிபுரம்.